தொகுதி 57



இதழ் 2

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

அநல ௵ மாசி ௴

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்!
—சுவாமி விவேகானந்தர்




ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை 600-004

# காந்தியடிகளின் பொன்மொழிகள்




★ சோதனைக் காலங்களிலெல்லாம் கடவுள் என்னைக் காப்பாற்றியிருக்கிறார். 'கடவுள் என்னைக் காப்பாற்றினார்' என்ற வாக்கியம், என்னைப் பொறுத்த வரையிலும் இன்று ஆழ்ந்த பொருள் கொண்டதாக இருக்கிறது. ஆனால் அந்த வாக்கியத்தின் முழுப்பொருளையும் நான் இன்னும் கண்டறியவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. பரிபூரணமாக அறிய இதைவிடப் பழுத்த அனுபவம் தேவை.

★ இந்தியாவிற்கும் மனித சமூகத்திற்கும் ஊழியன் என்று என்னைச் சொல்லிக் கொள்கிறேன். இந்த ஊழியத்திலேயே சாவதற்கு நான் விரும்புகிறேன். புதிய ஒரு மதத்தை ஸ்தாபிக்க நான் விரும்பவில்லை.

★ மறு உலகத்தில் இந்துக்கள் என்றும், கிறிஸ்தவர்கள் என்றும், முஸ்லிம்கள் என்றும் கிடையாது என்பது என் நம்பிக்கை. அங்கே அவர்களுடைய உத்தியோகங்களும் விலாசங்களும் கவனிக்கப்பட மாட்டாது. அவர்களுடைய செயல்களுக்கேற்றவாறுதான் அங்கு நியாயத்தீர்ப்பு செய்யப்படும்.

★ ஒழுங்கு, தியாகபுத்தி, பணிவு, திடசித்தம் ஆகிய குணங்களை அளிப்பதில் உண்ணாவிரதத்திற்கும் பிரார்த்தனைக்கும் உள்ளதைப்போன்ற சக்தி வேறு எதற்கும் கிடையாது.

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்


| தொகுதி—57 | அநல ஹூ மாசி மீ | இதழ் 2 |
|---|---|---|


## பொருளடக்கம்

பக்கம்






# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

தொகுதி 57 | அநல ஷூ மாசி மீ | இதழ் 2

## பிரார்த்தனை

नमः श्रीयतिराजाय विवेकानन्दसूरये ।
सच्चित्सुखस्वरूपाय स्वामिने तापहारिणे ॥

—स्वामी रामकृष्णानन्दः

நம: ஸ்ரீயதிராஜாய விவேகானந்த ஸூரயே |
ஸச்சித் சுகஸ்வரூபாய ஸ்வாமினே தாபஹாரிணே ||

—சுவாமி இராமகிருஷ்ணனந்தர்

யதிகளுக்கு மன்னர் ஆகவும் சச், சித், ஆனந்த சொரூபியாகவும் மூன்று தாபங்களையும் போக்குபவர் ஆகவும் உள்ள விவேகானந்த ரிஷியான ஸ்ரீசுவாமி ஜிக்கு நமஸ்காரம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன் தாள்வாழ்க
இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின் (று) அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன், அனேகன் இறைவன் அடி வாழ்க
வேகம் கெடுத்(து) ஆண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்(பு) அறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன் தன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல் வெல்க.

—திருவாசகம்

# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

உண்மையிலேயே ஆத்மானந்தம் எப்போதும் நித்தியமாக இருந்து கொண்டிருக்கிறது. ஆனுல் அக்ஞானத்தினுல் மட்டுமே அது மூடப்பட்டு மறைந்துள்ளது. உலக இன்பங்களில் உனது ஆசை குறையும் அளவுக்கேற்ப, ஈச்வரனிடம் உனக்குப் பிரேமை அதிகரிக்கும்.

ஜீவனின் உண்மைச் சுபாவம் சச்சிதானந்தமே ஆகும். இத்தனைவிதமான உபாதிகளும் அவனுக்கு அகங்காரத்தால் உண்டாயின. ஆதலால் ஜீவன் தனது உண்மை சுபாவத்தையே மறந்தவனுக இருக்கிறுன்.

புலியிடம்கூட பகவான் இருக்கிறுர் என்பது உண்மைதான். ஆனுல் அதற்காக நாம் அதன் முன்னுல் போய் நிற்கக்கூடாது. மிகமிகக் கொடியவர்களாக உள்ளவர்களிடமும் பகவான் இருப்பது உண்மை. ஆனுல் அந்தக் காரணத்தை முன்னிட்டு நாம் அவர்களுடன் தொடர்பு வைத்துக்கொள்வது சரியல்ல.

ஒவ்வொருவனும் தன்னுடைய அந்திம காலத்தில் பகவானுடைய ஞாபகம் வரும் படியான வழியைத் தேடிக்கொள்ள வேண்டும். அதற்குரிய ஒரே வழி கடவுளிடம் பக்தி செலுத்தி வாழ்வதுதான். உலகில் வாழும்போதே அதாவது முன்னரே ஒருவன் இப்படிப் பட்ட பக்தி நெறியில் தன்னைப் பழகிக் கொண்டால், அது அவனுடைய அந்திம காலத்திலும் நிச்சயமாக மனதில் எழும்.

புதிதாக நகரத்திற்கு வருபவன் இரவு வேளையில் தங்குவதற்கு வசதியாக ஒரு விடுதியை, முதலில் தேடிக்கொள்ள வேண்டும். அங்கு தனது சாமான்களை வைத்துவிட்டு, பிறகு அவன் தாராளமாக ஊர்சுற்றி வேடிக்கை பார்க்கப் போகலாம். அப்படிச் செய்யாவிட்டால் இரவு வந்தபிறகு தங்குவதற்கு இடம் தேடுவதில் இருட்டில் சிரமப்பட வேண்டி வரும். அதைப் போலவே, இந்த உலகத்திற்குப் புதிதாக வருபவனும் இறைவனுகிய நித்திய விடுதியை முதலில் தேடி வைத்துவிட்டு, பிறகு பயம் இல்லாமல் உலகில் வாழலாம். தான் செய்ய வேண்டிய காரியங்களை எல்லாம் கவனிக்கலாம். இல்லாவிட்டால் மரணம் என்னும் பயங்கர இருள் தன்னைச் சூழ்ந்து கொள்ளும்போது, அளவில்லாத துன்பங்களை அவன் அனுபவித்தே ஆகவேண்டும்.

பெரிய களஞ்சியங்களின் நுழைவாயிலின் முன்னுல் எலிகளைப் பிடிப்பதற்காகப் பொரி உருண்டை வைத்த பொறிகள் வைக்கப்பட்டிருக்கும். எலிகள் அற்பமான பொரி உருண்டையின் வாசனையை நுகர்ந்து, களஞ்சியத்தின் உள்ளே வைக்கப்பட்டுள்ள உயர்ந்த அரிசியைத் தின்பதால் கிடைக்கும் மகிழ்ச்சியை மறந்து, பொறியில் அகப்பட்டுச் சாகின்றன. இதைப் போலவே ஆத்மாவின் விஷயமும் இருக்கிறது. அது, தெய்விக ஆனந்தத்தின் வாயில்படியில் நிற்கிறது. அந்த தெய்விக ஆனந்தமோ கோடான கோடிக்கணக்கான மிகப் பெரிய உலக இன்பங்கள் எல்லாம் ஒன்றுகத் திரண்டதைப் போல உள்ளது. என்றுலும் ஆத்மாவானது அந்தப் பேரின்பத்தை அனுபவிக்கும் முயற்சியை மேற்கொள்ளாமல், அற்ப உலக விஷயமாகிய சிற்றின்பத்தின் வசப்படுகிறது. ஆதலால் மாயையாகிய வலையில் வீழ்ந்து அதிலேயே மூழ்கி இறந்து போகிறது.



ஓம்




## பண்பட்ட உள்ளம்

### மெய்யுரை

நாம் பலமற்றவர்கள் என்று நினைப்பது தவறு. அந்த மயக்கத்திலிருந்து விழியுங்கள். யாரும் உண்மையில் பலவீனர்கள் கிடையாது. ஆத்மா எல்லையற்றது, சர்வசக்தி வாய்ந்தது. எழுங்கள், உங்களுக்குள்ளிருக்கும் தெய்வத் தன்மையை வெளிப்படுத்துங்கள். எதிர்கால இந்துக்களே! என் இந்திய சகோதரர்களே! உறங்கிக்கொண்டிருக்கும் ஆத்மாவைத் தட்டி எழுப்பி, ஒவ்வொருவருக்கும் அவர்கள் உண்மை இயல்பைப் புகட்டுங்கள். உறங்கிக்கொண்டிருக்கும் ஆத்மா விழிப்படைந்தால், சக்தி வரும்; பெருமை வரும்; நன்மை வரும்; தூய்மை வரும்; மிக உயர்ந்த பொருள்களெல்லாம் தாமாகவே வந்து சேர்ந்துவிடும்.

Vivekananda

(சுவாமி விவேகானந்தர்)

மனச்சக்திக்கு ஒருவகையான குறைபாடு உள்ளது. ஒன்றை எண்ணி அந்த எண்ணத்தில் மூழ்கிக் கிடக்கும்பொழுது மனம் மற்றோர் எண்ணத்தை எண்ணுது. ஆத்மத் தியானத்தில் லயப்பட்டுவிடும்போது மனம் லௌகிகக் காரியயங்களை இயற்றும் சக்தியை இழந்துவிடுவது இயல்பு. விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபாடுடையவர்களுங்கூட இவ்வாறு தினசரிக் கடமைகள், உடல் சம்பந்தமான தேவைகள் முதலியவற்றில் பாராமுகமாக இருப்பதுண்டு. தலைசிறந்த மேனாட்டு விஞ்ஞானி ஸர் ஐஸக்நியூடன் என்பாரைப் பற்றி ஒரு நிகழ்ச்சி குறித்து வைக்கப்பட்டுள்ளது. ஆராய்ச்சிக் கூடத்தில் மும்முரமாக இருந்த சமயம் அவருடைய ஆள் அவருடைய அடுத்தவேளை உணவைக் கொண்டு வந்து மேசையின்மீது வைத்துச் சென்றான். அவன் வந்ததும் போனதும் நியூடனுடைய கவனத்துக்கு இலக்காகவில்லை. அவர் ஆராய்ச்சியில் மூழ்கிக் கிடந்தார். சிறிது நேரம் கழிந்ததும் நண்பர் ஒருவர் அவரைக்காண ஆராய்ச்சிக் கூடத்திற்குள் நுழைந்தார். வந்தவரை நியூடன் கவனிக்கவே இல்லை. நண்பருக்குப் பசியாக இருந்தது. நியூடனுக்காக வைத்திருந்த உணவை அவர் நண்பர் என்ற சுதந்திரத்துடன் புசித்துவிட்டுப் போய்விட்டார். அதையும் நியூடன் கவனிக்கவில்லை. சிறிது நேரம் போனதும் நியூடனுக்குப் பசி உபாதை ஏற்பட்டது. அவர் வழக்கப்படி மேசையருகில் சென்றார். பாத்திரத்தில் இருந்த உணவு புசிக்கப்பட்டிருந்த சின்னங்களைக் கண்டார். தாமே அதைப் புசித்துவிட்டு, உண்டதை அடியோடு மறந்து, மீண்டும் உணவுவேட்கை கொண்டதாக எண்ணித் தம்மையே தம் மறதிக் குணத்திற்காகக் கடிந்து கொண்டு மீண்டும் ஆராய்ச்சிக் கூடத்திற்குப்

போய் ஆராய்ச்சிவேலையில் புகுந்தார்! செயல் புரிந்தது எது, பிற செயல் மறந்தது எது? என்ற உணர்வே அவரிடம் இல்லாத அளவுக்கு அவருடைய விஞ்ஞான ஆராய்ச்சி அவரைப் பரவசப்படுத்தியிருந்தது.

ஞானசாதகர்களும் கவிகளும் கலைஞர்களும் இவ்வாறே குளிக்கவும் புசிக்கவும் உடைமைகளைக் காத்துக் கொள்ளவும் மறந்துவிடும் சந்தர்ப்பங்கள் பலப்பல குறிக்கப்பட்டுள்ளன. ஸ்ரீ ராமகிருஷ்ணரோ அறுபது நாழிகையும் பகவத் சிந்தையில் மூழ்கிக் கிடந்தவர். ஆதலால் அவரிடம் இந்த லௌகிக விஷயங்களை மறக்கும் தன்மை பேரளவுக்கு அன்றே காணப்பட்டிருக்க வேண்டும்! அதுதான் இல்லை. அவர் சின்னஞ்சிறு லௌகிக விவரத்தைக்கூட மறக்கவே இல்லை. ஆனால் இடையறாத தியான நிலையிலேயே அவர் திளைத்திருந்ததும் உண்மையே. அவர் சமாதியில் மூழ்கினாரானால் உடலுணர்ச்சியையே அறவே இழந்துவிடுவார். சாதாரண உணர்வு நிலையில் இருக்கும்பொழுதோ அவரது கவனம் எல்லா விஷயங்களையும் கவர்ந்திருக்கும். அவரது சீடர்கள் இதைக் கண்டு வியந்தது பல தடவைகள் ஆகும். இதுபற்றிய சில சம்பவங்களை ஸ்ரீ சாரதானந்த சுவாமிகள் தம்முடைய ஸ்ரீ ராமகிருஷ்ணலீலாப் பிரசங்கத்தில் குறிப்பிட்டுள்ளார்.

ஒரு சமயம் ஸ்ரீராமகிருஷ்ணர் தம்முடைய இல்லற பக்தரான பலராம் வஸுவின் இல்லத்திற்குப் போய்க்கொண்டிருந்தார். அப்பொழுது காலை நேரம். அவருடைய அண்ணன் மகனான ராம்லாலும் சீடரான யோகினும் (யோகானந்தர்) கூடச்சென்றனர். வண்டி கொஞ்சதூரம் சென்றதும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் யோகினைப் பார்த்து, ''வேஷ்டியையும் துண்டையும் எடுத்துக்கொண்டாயா?'' என்று கேட்டார். யோகானந்தர், ''துண்டை எடுத்து வந்துள்ளேன். வேட்டியை எடுத்துவர மறந்துவிட்டேன். உங்களுக்கு ஒரு புது வேஷ்டி தருவதற்குப் பலராமும் அவர் வீட்டுக்காரரும் மகிழ்ச்சியே கொள்வர்'' என்று விடை பகர்ந்தார். ஆனால் குருதேவர், ''இல்லை, அவர்களுக்கு இதனால் நாம் சங்கடமே உண்டுபண்ணுவோம். 'இது என்னடா, இவர் மாற்றுவேட்டி கூட இல்லாமல் வந்து சேர்ந்துள்ளாரே!' என்று அவர்கள் நொந்துகொள்ளவே செய்வர். வண்டியைநிறுத்து. இறங்கிப்போய் வேட்டியை எடுத்து வா.'' என்று கூறினார். மேலும் குருதேவர் உலகப் போக்கு ஒன்றைப் பற்றிய உண்மையொன்றையும் தெரிவித்தார். ''நல்லார் ஒருவர் வீட்டுக்கு அதிதியாக வந்தால் அன்று வீட்டில் எல்லாம் நிறைந்திருக்கும். ஆனால் துர்ப்பாக்கியசாலி ஒருவர் அதிதியாக வரும் நாளன்று வீட்டில் கஷ்டநிலைமை நிலவுவதைக் காணலாம். போதாமையும் இல்லாமையும் அன்று வீட்டில் தாண்டவமாடும். அதிதியைப் பராமரிப்பதில் கிரகஸ்தனுக்குத் தொல்லை மிக ஏற்படும்'' என்றவாறு அவர் உலக அநுபவத்தில் ஓர் அம்சத்தை எடுத்துரைத்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் தட்சிணேஸ்வர ஆலயத்தில் வாழ்ந்து வந்தபொழுது அவருடன் ஸ்ரீ பிரதாப் ஹாஸ்ரா என்பவரும் வாழ்ந்துவந்தார். ஹாஸ்ரா முற்றும் கனியாத ஒரு பிறவி. அவர் பெரிய சமயசாதகர் போலத் தம்மைக் காட்டிக் கொள்ளுவார். ஆனால் நிஜமான ஆத்மநிறைவு அவரிடம் இல்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணர் கல்கத்தாவில் இருந்த பக்தர் வீடுகளுக்கு விஜயம் செய்தபொழுது ஹாஸ்ராவும் சில சமயங்களில் உடன் செல்வதுண்டு. ஒருசமயம் கல்கத்தா சென்று, குருதேவருடன் திரும்பி வரும்பொழுது துண்டு ஒன்றை உடன் எடுத்துவர அவர் மறந்தே போனார். தட்சிணேஸ்வரம் வந்து சேர்ந்ததுமே இந்தத் தகவல் குருதேவருக்குத் தெரியவந்தது. அவர் ஹாஸ்ராவைப் பார்த்து, ''நான் பகவானுடைய நாமோச்சாரண வேகத்தில் உடுத்தும் துணியின் உணர்வையுங்கூட இழந்துவிடுகிறேன். ஆனால் ஒரு தடவையாவது என் சிறு பையையோ துண்டையோ விட்டு வந்ததில்லை. நீயோ ஏதோ கொஞ்சம் ஜபமாலையை உருட்டும் பழக்கம் காரணமாக இவ்வளவு மறதியுடையவனாக உள்ளாய்'' என்றார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூர்ணகும்பம், ஹாஸ்ராவோ துளும்பும் குறைகுடம்!

அன்னை சாரதாதேவியாருக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணர் செய்த உபதேசமாவது: ''வண்டியிலோ படகிலோ ஏறும்பொழுது நீ முதலில் ஏறிக் கொள்ள வேண்டும். இறங்கும்பொழுது ஏதாவது சாமான் பின்தங்கிவிட்டதா என்று பார்த்துவிட்டுக் கடைசியில் இறங்க வேண்டும்.'' சின்னஞ்சிறு விஷயங்கள் பற்றியும், பரத்திலேயே உள்ளம் ஊறியிருந்த பரமஹம்ஸர் இவ்வளவு நுட்பக் கவனமும் விழிப்பும் உடையவராக இருந்தார்.

பாவமுகம் என்ற அதி சீரான பரவசநிலையில் எப்பொழுதுமே லயித்திருந்த குருதேவர், நல் வாழ்வுக்கான எல்லா விஷயங்களிலுமே வெகு ஜாக்கிரதையாக இருப்பார். எந்தப் பொருளானுலும் அதை அதற்கு உரிய இடத்திலேயே அவர் வைப்பார். துணிமணிகள் போன்ற தினசரி வாழ்வுக்கு வேண்டிய பொருள்களைப் பற்றிக் கண்ணும் கருத்துமாகவே இருப்பார். ஏதோ ஓர் இடம்செல்லும் போதோ அல்லது ஓர் இடத்திலிருந்து திரும்பி வரும் போதோ ஏதாவது பொருள் பற்றிய மறதியோ ஞாபகமின்மையோ ஏற்பட்டுவிட்டதா என்று வினவுவார். தம்மை நாடிய சாதகர்களைப் பற்றிய லௌகிக வசதிகள், சூழ்நிலை முதலியன ஆத்ம சாதனைக்கு இடைஞ்சல் உண்டுபண்ணுமாறு உள்ளனவா அல்லது அநுகூலமாகஅமைந்துள்ளனவா என்று விசாரித்துப் பார்த்து, அதற்கான மாற்று நிலையையோ அல்லது இன்னமும் உபகாரமான ஏற்பாட்டையோ எடுத்தோதுவார். ஞானேபதேசம் மட்டும் செய்துவிட்டு அத்துடன் நின்றுவிடமாட்டார். உத்தம வைத்தியன் போன்று நோய் இன்னதென்று கண்டும், மருந்து இன்னதென்று தெரிவித்தும், மருந்து தக்க முறையில் உட்கொள்ளப்படுகின்றதா என்று கூர்ந்து கவனித்தும் நோயை நீக்கி விடுவார்.

வேதாந்தக் கருத்துக்கள் அனைத்தின் தொகுப்புமாகத் திகழ்ந்தார் தட்சிணேஸ்வர மாமுனிவர். சமயக் கருத்து உலகிலே அவர் போன்ற மாமன்னர் அதுவரை இருந்ததில்லை என்றால் அது மிகையாகாது. பாவமுக நிலையையே அவர் தம்முடைய ஸஹஜநிலையாகக் கொண்டிருந்தார். அத்வைத நிர்விகல்பம் முதற்கொண்டு ஸவிகல்பம் வரையிலான எல்ல ஞானபூமிகளிலும் அவர் சஞ்சரித்தார். எந்த மார்க்கத்தைப் பின்பற்றிய சாதகராயினும் அவருடைய போக்குக்கு ஏற்ற போதனைகளை எடுத்தோதுவதிலேயே அவர் கரைகண்டவராக இருந்தார். இருளைப் போக்கி ஒளி தருவதிலும் ஏமாற்றம் தோல்வியாகியவற்றில் சோர்ந்து நின்றவருக்கு நம்பிக்கை ஊட்டுவதிலும், சோதனைகளிலும் துன்பங்களிலும் சிக்கி நொந்து போனவருக்கு அபாரமான சாந்தியையும் ஈடற்ற உற்சாகத்தையும் ஊட்டுவதிலும் அவருக்கு ஈடு அவரேதாம். தம்மை வந்தடைந்தவர் யாவருக்கும் அவர் வாழ்க்கைப் புயலில் அபயம் அளிக்கும் புகலிடமாக இருந்த பெருமையையும் பாரமார்த்திகத் துறையில் அவர் சர்வவல்லமை கொண்ட ரட்சகராக இருந்த மாண்பையும் சொற்களால் விவரிப்பது சாத்தியமாகாது.

ஸ்ரீ ராமகிருஷ்ணரை வெகு நன்றாக அறிந்து புரிந்துகொண்டவர் என்று சொல்லக்கூடியவர் சுவாமி விவேகானந்தரே ஆவார். அவர் ஒரு சமயம் இவ்வாறு கூறினார்:

''பௌதிகசக்திகளை அடக்கி மக்களைப் பிரமிக்கவைக்கும் அசாதாரணமான அற்புத நிகழ்ச்சியைக் காட்டுவது வெகு கடினமான ஒரு காரியமாகாது. ஆனால் ஞானப் பண்பே உருவான இந்தப் பிராமணோத்தமர் (ஸ்ரீ ராமகிருஷ்ணர்) மனிதரின் மனங்களைக் களிமண்ணைப் பிசைந்து கையாளும் குயவன் போன்று உடைத்தும் பிசைந்தும் உருவாக்கியும் மறுபடி வெகு லாகவமாகப் புது உருவை ஆக்கியும் ஸ்பரிச மாத்திரத்தாலேயே புதுக் கருத்துக்களை அவற்றில் நிறைத்தும் இஷ்டப்படியெல்லாம் கையாடிய பேரற்புதத்தைவிடப் பெரியதோர் அற்புதமான, அசாதாரணமான சம்பவத்தை நான் கண்டதேயில்லை.''

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு ஜீவலீலா நிபுணர். இலேசில் வளையாத ஜீவஸம்ஸ்காரங்களையெல்லாம் இஷ்டப்படி வளையவைத்தும், கரைக்கவே முடியாத கற்பாரை போன்று இறுகிப் போன பிரவிருத்திகளையெல்லாம் கரையவைத்தும் பாபாத்மாக்களைப் புனித ஜீவன்களாக மலரச் செய்யவல்ல மண்ணைப் பொன்னாக்கும் ஸ்பரிசவேதிக் கல்லாக இருந்தும் அவர் அவதார லீலை செய்தார். துர்நெறியின் பயனாகக் கல்லாய்ச் சமைந்துபோன காரிகையைப் பாத தூளியின் மகிமையால் மறுபடி உயிர்ப்பித்துத் தூய்மை வடிவினளாகச் சமைத்த ஸ்ரீ ராம பிரான் வழி வந்தவர் அவர். சின்னஞ்சிறு விவகாரங்களிலும் அவர் பக்குவ உயர்வைக் காட்டியது, கீதையில் ஸ்திதப் பிரஜ்ஞனுடைய லட்சண மேன்மையைப்பற்றிய பிரச்னை எழுந்த பொழுது அர்ஜுனன், 'ஸமாதியில் நிலைத்த நிறைஞானியின் லக்ஷணம் யாது? உறுதியான அறிவுடையவன் எதைப் பேசுகிறான்? எப்படி அமர்கிறான்? எவ்வாறு நடக்கிறான்?' என்றெல்லாம் வினவுவதை நமக்கு நினைவூட்டுகிறது. அந்தர்முகமாகப் பூரணத்தன்மை எய்தியவருடைய பகிர்முகப் பிரவிருத்தி (வெளியுலகுநாட்டம்) யாதாயினும் அந்தப் பிரவிருத்தியிலும் (உள்முக நாட்டத்திலும்) நிறைவு கமழுவது நிச்சயம். அமுதமயமான நிறைமதியின் ஒவ்வொரு கிரணமும் அடிமுதல் நுனி வரையில் அமுத ரஸம் ஊடுருவிய பொருளே ஆகிறதன்றோ?



# அன்பின் சிகரம் அப்பூதி

**திருமுருக கிருபானந்தவாரியார்**

திங்களைப் போல் குளிர்ந்த சோலைகளுக்கு இடையில் விளங்கிய திங்களூர் என்னும் திருப்பதியில் அந்தணர் மரபில் அவதரித்தவர் அப்பூதியடிகள். திருநாவுக்கரசரின் பெருமையைக் கேள்விப்பட்டார் அவர்; அவரது அடி மலரில் அளவற்ற அன்பு பூண்டார்; அவரது திருநாமத்தையே எப்போதும் உச்சரித்துக் கொண்டிருந்தார்; வீட்டிலுள்ள அளக்குங் கருவிகள், நிறுக்குங் கருவிகள், குழந்தைகள், பசுக்கள் முதலியவைகட்கெல்லாம் திருநாவுக்கரசு நாயனாரின் திருப்பெயரையே சூட்டி அழைத்தார்; சாலை, குளம், கிணறு, தண்ணீர்ப் பந்தர் முதலிய எல்லாத் தருமங்களையும் 'திருநாவுக்கரசு' என்ற திருப்பெயரால் அமைத்தார்.

அவ்வழியே சென்ற திருநாவுக்கரசர் தம் பெயரில் உள்ள தண்ணீர்ப் பந்தரைக் கண்டு பெரும் அதிசயம் கொண்டார்; அங்குள்ளோரை அணுகி, ''இது யாருடைய தண்ணீர்ப் பந்தர்?'' என்று வினவினார்.

''இது அப்பூதியடிகளுடையது; அவர் இப்போதுதான் திருமனை சென்றார்'' என்று அங்கிருந்தோர் கூறினர்.

அதனைக் கேட்ட வாகீசர், அப்பூதியடிகளது திருமனையை அடைந்தார். அடியவர் ஒருவர் வந்திருக்கிறார் என்பதை அறிந்த அப்பூதியடிகள் வெளியே வந்து அவரைத் தொழுதார்.

''ஐயா! தாங்கள் வைத்த அறச்சாலை முதலியவைகட்கு உமது பேர் எழுதாமல் வேறு ஒரு பேர் எழுதிய காரணம் யாது?'' என்று அவரிடம் வினவினார் அப்பரடிகள்.

''சிவபெருமானது திருவருள் முழுவதும் பெற்ற எமது திருநாவுக்கரசரது பேர் வேறு பேரோ? நன்று; நன்று உங்கள் பேச்சு! அவரை அறியாதவரும் தரணியில் உளரோ? நீர் யார் என்று சிறிது கோபத்துடன் கேட்டார் அப்பூதியடிகள்.

''அன்பரே! இறைவரால் சூலை வலி தந்து தடுத்தாட்கொள்ளப்பெற்ற உணர்விலாச் சிறியேன் அடியேன்'' என்று கூறினார் திருநாவுக்கரசர்.

அதைக் கேட்ட அப்பூதியடிகள் அளவிலா ஆனந்தமடைந்தார். மனைவி மக்கள் முதலியோரை அழைத்து அப்பரடிகளின் அடிமலரில் வணங்கச் செய்தார். அப்பரடிகளை உள்ளே அழைத்துச் சென்று உணவு கொள்ளுமாறு வேண்டிக் கொண்டார். அப்பரடிகளும் அதற்கிசைந்தார்.

திருநாவுக்கரசர் திருவமுது செய்ய இசைந்தவுடனே எல்லையற்ற பேரன்புடன் திருவமுது ஆயத்தம் செய்யத் தொடங்கினார் அப்பூதி அடிகள். அறுசுவை உண்டியும் கறியமுதும் சமைத்தனர். அப்பூதியடிகள் தமது மூத்த புதல்வராகிய மூத்த திருநாவுக்கரசை அழைத்து வாழைக் குருத்தை அரிந்து வருமாறு கட்டளையிட்டார். ''இத்திருத்தொண்டு நமக்குக் கிடைத்ததே'' என்று மகிழ்ச்சியுடன் தோட்டத்துக்குச் சென்றான் சிறுவன். தோட்டத்தில் உள்ள வாழையின் குருத்தை அரியும்போது ஒரு கொடிய நாகம் அந்தச் சிறுவனைத் தீண்டியது.

அதைப் பொருட்படுத்தாத அந்தச் சிறுவன் அரிந்த வாழை இலையைத் தன் தாயிடம் கொடுத்தான். விஷம் தலைக்கேறியதால் தன்னை நாகம் தீண்டிய செய்தியை அறிவிக்காமல் விழ்ந்து மாண்டான்.

அதனைக் கண்ட அப்பூதியடிகளும் அவரது மனைவியாரும், ''மகன் மாண்ட செய்தியை அப்பரடிகள் அறிந்தால் அமுது செய்யத் தடையாகுமே'' என்று மனம் கலங்கினர். மகனுடைய உயிர் நீங்கிய உடலை ஒருபுறம் வைத்தனர். சிறிதும் தடுமாற்றமின்றி, மலர்ந்த முகத்துடன், வாகீசப் பெருந்தகையை அழைத்து, திருவடி விளக்கி, ''அமுது, செய்ய வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர்.

திருநாவுக்கரசர் திருவுள்ளத்தில் ஒரு தடுமாற்றம் ஏற்பட்டது. நடந்ததைத் திருவருளால் அறிந்த அவர், ''மூத்த திருநாவுக்கரசு எங்கே?'' என்று கேட்டார்.

''அவன் இப்போது இங்கு உதவான்'' என்றுர் அப்பூதியடிகள்.

''உள்ளதை உரைப்பீர்'' என்றுர் திருநாவுக்கரசர். அப்பூதியடிகள் நிகழ்ந்ததை உரைத்தார். ''நன்று செய்தீர்; யாவரே இவ்வாறு செய்யவல்லார்!'' என்று பெருங்கருணை கூர்ந்து அப்பரடிகள் மாண்ட பிள்ளையின் சவத்தைத் திருக்கோயிலுக்கு முன் கொண்டு வரச் செய்து, ''ஒன்றுகொலாம்'' என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினுர்.

ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொலாமுய ரும்மதி சூடுவர்
ஒன்று கொலாமிடு வெண்டலை கையது
ஒன்று கொலாம் அவர் ஊர்வதுதானே.

என்னே விந்தை! மாண்ட மைந்தன் உயிர் பெற்று எழுந்தான்.

அப்பூதியடிகள் அதுகண்டு அகமிக மகிழ்ந்தாலும், அப்பரடிகள் அமுது செய்வதற்குக் காலம் தாழ்த்துவதற்கு வருந்தினுர். அவருடைய அல்லலையறிந்த அப்பர் அப்பூதியடிகளின் திருமனைக்கு எழுந்தருளி அமுது செய்து அருள் புரிந்தார்.

அப்பரடிகள் திருப்பழனம் சென்று அப்பூதியடிகளைச் சிறப்பித்துத் திருப்பதிகம் பாடியருளினுர்.



ஈசன்மீது எவ்வளவு பாரத்தைப் போட்டாலும் அவ்வளவையும் அவர் தாங்கிக்கொள்கிறுர். எல்லாச் செயல்களையும் ஒரு பரமேசுவர சக்திதான் நடத்திக்கொண்டிருக்கிறது.

**—ஸ்ரீ ரமண மகரிஷி**

ஒரு சோம்பேறியின் மனது அவனையே சாப்பிட்டுவிடுகிறது. **—லூதர்**

குருநானக் தமது சீடர்களுக்கு உபதேசித்த மூன்று போதனைகள் வருமாறு: 1. கடவுளின் திருநாமங்களை ஜெபித்தல். 2. கடவுளின் புகழைப் பாடுதல். 3. தம்மிடம் உள்ளவைகளை அண்டை அயலில் உள்ளவர்களோடு சேர்ந்து பகிர்ந்து உண்ணல். **—சீக்கியம்**

செங்கோனைச் சென்று கண்டு தொழ நாலாயிரம் கண் படைத்திலனே அந்த நான் முகனே! **—அருணகிரிநாதர்**

கண்களுக்கு அருகிலுள்ள சிறுதூசி உலகம் முழுவதையும் மறைத்துவிட்டுத் தன்னை மட்டுமே காண இடம் கொடுக்கும். ''நான்'' என்பதைப் போல எனக்குத் தொந்தரவு கொடுக்கும் தூசி வேறு அறியேன். **—ஜார்ஜ் எலியட்**

தனி மனிதனுக்கு உணவு அளித்தல் மானிட இனம் முழுவதையும் உயிர்ப்பிப்பதை ஒக்கும். **—குரான்**

நீ செய்ய வேண்டியதை நன்கு முழுமனதுடன் செய். பலனை ஆண்டவனுக்கு அர்ப்பணித்துவிடு. எல்லாம் பகவான் செயல் என்று தெளிந்த மனதுடன் வாழ்வையே பகவானுக்கு அர்ப்பணித்துவிட்டு, எவன் ஒருவன் தனது வேலைகளைச் செய்கிருனே அவனைப் பாவ புண்ணியங்கள் தீண்டா. இம்மையில் புகழையும் மறுமையில் சொர்க்கத்தையும் அவன் அடைவான்.

**—கீதை**

எவரும் பிறர் எவரையும் ஏமாற்ற வேண்டாம். எவரும் பிறர் எவரையும் அவமதிக்க வேண்டாம். பிறருக்குத் துன்பம் இழைக்கக் கருதி எவரும் எவரிடமும் பகைமை பாராட்ட வேண்டாம். **—புத்த மதம்**

கையைக் கெட்டியாகக் கழுத்தில் கட்டிக்கொண்டும் இராதே; கையில் கிடைத்ததை எல்லாம் வீணே வீசியெறிந்து கொண்டுமிராதே. வீணில் பொருளைவாரி இறைப்பவர்கள் எல்லோரும் சைத்தானின் உடன் பிறந்தவர்கள் என்பதில் சந்தேகமில்லை. **—இஸ்லாம்**

# சுவாமி பிரேமானந்தரின் போதனை

மொழிபெயர்ப்பு: 'அண்ணா'

ஸ்ரீமத் பிரேமானந்த ஸ்வாமிகள் தமது சிடர்களில் எவருக்கும் தீக்ஷை அளிக்கவில்லை. ஆனால் வெகுவாகத் தமது கடிதங்களின் மூலம் அவர்களுக்கு ஆத்மஞானத்தைப் போதித்தார். தம்முடைய புத்திமதியை நாடிய ஸாதுக்களுக்கும் பக்தர்களுக்கும் அவர் தைரியமூட்டுவதும், அறிவை விளக்குவதும் அன்பைப் பெருக்குவது மான கடிதங்களை வரைந்தார். அவருடைய வார்த்தைகள் எக்காலத்தும் மனிதனுடைய



தெய்விகத் தன்மையை ஞாபகப்படுத்துவதாகவும், கடவுளை அடைவதே வாழ்க்கைப் பயன் என்பதை வற்புறுத்துவதாயும் இருந்தன. 1902 முதல் அவர் இறுதிக்காலமான 1918 வரை இவ்வாறான கடிதங்களை எழுதியுள்ளார்.

(1)

ஜயராம்பாடியில் தூய அன்னையாருடன் சில நாட்கள் தங்கியிரு. அவருக்குப் பணிவிடை செய். அதனால் ஆசி பெற்று மனித வாழ்க்கைப் பயனை அடை. இதுதான் என்னுடையகருத்து. எவ்வளவு பொறுமையுடனும், மன்னிக்கும், பான்மையுடனும், குற்றங்களைச் சகிக்கும் குணத்துடனும் அவர் வீட்டில் வாழ்க்கையை நடத்துகிறார்! இதற்கு முன் எப்போழுதும் இந்தக் குறிக்கோள் உலகில் காணப்பட்டதில்லை. இந்தப் படிப்பினை உனது வாழ்வை மாற்றியமைக்காமற் போனால், உனக்கு முன்னேற வேறு வழியில்லை. தூய அன்னையை தரிசிப்பது ஸ்ரீராமகிருஷ்ணரைத் தரிசிப்பதுபோன்றதே. அன்னை பிறந்த ஊரில்தான் அவருடைய உண்மையான இயல்பை நாம் காணமுடியும். அவரிடம் எவ்வளவு ஆழமானபொருள் பொதிந்துள்ளது! அவர் எத்தகைய பரந்த உள்ளம் படைத்தவர், எவ்வளவு அன்புடையவர் என்பதைக் காண்பாய். அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே அகங்காரமும் செருக்கும் பறந்து போம். அவருடைய பாங்குகளையும் நடைமுறைகளையும் நன்கு கற்றுக்கொள்ள முயற்சி செய். மனித வர்க்கம் அனைத்திடமும் அவர் அளவிலாத இரக்கம் பூண்டவர். அதில் ஒரு துளி கிடைத்தால்கூட நாம் முற்றும் நிறைந்தவர்களாவோம்.

நல்ல நம்பிக்கையுடனும் மரியாதையுடனும் பூஜை செய்தல், ஜபம் செய்தல், தியானம் செய்தல், தூய நூல்களை ஓதுதல் ஆகிய எல்லாம் பிரம்மசரியத்தில் அடங்கும். தவம் என்பது உள்ளத்தையும் உதட்டையும் ஒன்றுபடுத்துதலாகும். பிரம்மசரிய விரதத்தை ஏற்கும் போது சில மந்திரங்களை உச்சரிப்பதால் மட்டும் இந்த நிலை கைகூடிவிடாது.

ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய படத்தை, ஸ்ரீராமகிருஷ்ணருடைய பூஜைஅறையில் வைத்துக்கொள்ளலாமா என்று என்னை ஒருவர் கேட்டிருக்கிறார். எல்லா மதங்களுக்கும் உரிய எல்லா தேவதேவிகளின் படங்களையும் அங்கு வைக்கலாம். ஸ்ரீராமகிருஷ்ணர் எல்லா மதங்களிலும் உள்ள எல்லாப் பிரிவினர்க்கும் வழிகாட்டி ஆவார்.

ஒருவருக்கொருவர் ஒருபோதும் குறைகளைக் காணவேண்டாம். நற்குணங்களையே காண வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியபடி உமியைத்தள்ளி தானியத்தை வைத்துக் கொள்ளும் முறத்தைப்போல் இரு. நல்ல பகுதிகளைக் கீழே போகவிட்டுப் பயனற்ற பகுதியை வைத்துக்கொள்ளும் சல்லடையைப்போல் இராதே.

உலகெங்கும் ஸ்ரீராமன் நிறைந்திருப்பதாக எண்ணி நாம் உலகத்தாருடன் அளவளாவிப் பழக வேண்டும். எவரையேனும் பகைத்தாலோ துன்புறுத்தினாலோ அது எங்கும் நிறைந்த இராமபிரானையே பகைத்துத் துன்புறுத்தியதாகும்.

ஒவ்வொரு கிராமத்திலும் பட்டிணத்திலும் ஸ்ரீராமகிருஷ்ணருடைய பூஜை நிகழும்படிச் செய்யவேண்டும் என்பது என் ஆசை. அவருடைய பெயரால் உலகம் விழிப்புற வேண்டும்.

கஷ்டப்பட்டு வேலை செய். முயற்சியைக் கைவிடாதே. வேலை செய்து கொண்டே சாவது நல்லது. ஒருபோதும் சோம்பி இராதே.

பல விதமான மனோராஜ்யம் செய்துகொண்டு உன்னைக் குழப்பிக் கொள்ளாதே. கடவுள் தமது வேலையைச் செய்கிறார். நீ அவருடைய கருவியாக இரு. 'நான் கர்த்தா' என்ற எண்ணம் ஒருவனைப் பற்றிக்கொண்டால் அது அவனைப் பிணிக்கும் சங்கிலியாகும். அப்படிச் செய்யும் செயல்களால் நிலையான நன்மை எதுவும் வராது.

பேச்சாலும் செயலாலும் எண்ணத்தாலும் ஸ்ரீராமகிருஷ்ணரைச் சரணை அடை. எல்லாம் நல்லதாகும்.

கிழக்கு வங்காள வாலிபர்கள் ஸ்ரீராமகிருஷ்ணரிடமும் விவேகானந்தரிடமும் வெகு ஆர்வங் கொண்டுள்ளார்கள். அந்த ஆர்வம் இன்னும் வளரட்டும். அடக்க முடியாத புதிய சக்தி தோன்றட்டும். அன்பு வெள்ளம் நாடெங்கும் பாயட்டும். அந்த அன்பு வெள்ளத்தில் இந்துக்களும், முகம்மதியர்களும், கிறிஸ்தவர்களும், பெரியோரும், சிறியோரும் எல்லோரும் முழுகட்டும். ஐரோப்பாவும் அமெரிக்காவும் மற்றெல்லா நாடுகளும் பொறுமையை மறந்து, அன்பின் வேகத்தையும் ஒரே கடவுளிடம் பக்தியின் பெருமையையும் உணரட்டும்.

பௌதிக விஞ்ஞானம் அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்கவில்லை என்பது தெளிவு. அமைதிக்கு வழிகாட்டுவதற்காகவே ஸ்ரீராமகிருஷ்ணர் எழுத்தறிவில்லாதவரைப்போல் வந்தார். படிப்பினால் கர்வங்கொண்டவர்களின் தற்புகழ்ச்சியை ஒழிக்கவே அவர் தோன்றினார் எனலாம். கள்ளங்கவடில்லாமல் இருங்கள். உள்ளத்தையும் உதட்டையும் ஒன்றுபடுத்தி அவரை முழு மனத்துடன் வழிபடுங்கள். இப்பிறவிலேயே கடவுளைக்கண்டு உங்கள் வாழ்க்கையைப் பயனுறச் செய்யுங்கள். அவருடைய நாமத்தை ஜபித்தால் அளவற்ற சக்தி உதிப்பதை உணர்வீர்கள். திடச் சித்தம் உங்களுக்கு ஏற்படட்டும். அளவுகடந்த சக்தி உங்களிடம் உறைகிறதென்று நம்புங்கள். பரந்த உள்ளத்தையும் சிறந்த பெருமையையும் உங்களுக்கு இறைவன் அளிக்க வேண்டுமென்று அவரை நான் வேண்டிக் கொள்ளுகிறேன்.

ஒரு குடத்தின் அடியில் சிறு துவாரமிருந்தாலும் அதில் வைத்த தண்ணீர் ஒழுகிப் போகும். அதில் தண்ணீரைச்சேகரித்து வைக்க இயலாது. உலக இன்ப வேட்கைதான் ஒரு சாதகனுடைய உள்ளத்தில் உள்ள துவாரம். அந்த துவாரத்தை அடைத்துச் சீராக்குவதற்குத் தேவையானவை: கடவுளைப் பற்றிய உண்மைகளைக் கேட்டல், கடவுளை தியானித்தல், அவருடைய நாமத்தை ஜபம் செய்தல், புண்ணிய நூல்களைப் படித்தல், பூஜை செய்தல், பிரார்த்தனை செய்தல் முதலியவையாகும். ஒவ்வொரு படியிலும் உனக்குச் சோதனை வரும். நீ கவனத்துடன், மிகுந்த கவனத்துடன் இருக்க வேண்டும்.

இவ்வுலகம் தோன்றி மறைவது. அதிலுள்ள இன்பதுன்பத்தால் சோர்வடையாதே. உலகில் ஏற்படும் மாறுதல்கள் இறைவனுடைய இச்சை என்றும், நிகழ்வதெல்லாம் நமது நன்மைக்கே என்றும் மீண்டும் மீண்டும் மனதை திடப்படுத்திக்கொள்.

எந்த நற்செயலை நீ செய்தாலும் அது கடவுளின் சக்தியால் செய்யப்பட்டதென்றும், நீ அவருடைய கைகளில் உள்ள கருவியே என்றும் நம்புவாயாக. நீ செய்யும் எந்தக் காரியத்தையும் துன்பமாய்க் கருதாமல், சுயநலத்தை நாடாமல், பயனில் ஆசையில்லாமல் செய்வதற்கு முயல்வாயாக. அது கருமத் தளையைச் சேதிக்கும். ஒரே மருந்து அத்துடன்கூடிய பத்தியத்தால் வெவ்வேறு பயனைத் தருவதுபோல், ஒரே

கருமம் தளையாகவும் ஆகலாம், தளை நீங்கிய தாகவும் ஆகலாம். பற்றில்லாமல் ஈசுவரனுக்கு அர்ப்பணமாகக் கருமம்செய்தால் அது தளையை நீக்கி பக்தியைத் தருவதாகும். உலகாயதமான பெயரிலோ புகழிலோ வேறு ஒரு பொருளிலோ நோக்கத்துடன் செயலாற்றினால் மதி மயக்க மும் உலகத்துடன் பிணிப்பும்தான் விளையும்.

உனது நண்பருக்கு நீ கூறவேண்டியது என்ன வென்றால், அவர் செய்யவேண்டிய பணியே தவ மும் பூஜையும் பஜனையும் உபவாஸமும் தீர்த்த யாத்திரையும் ஆகும் என்பதே. அவர் தியானத் திற்கு உட்காரும்பொழுது உறக்கத்தில் ஆழ் வதை நான் காண்கிறேன். அதில் என்னபயன்? கடவுளுக்குச் சேவையாகப் பணிகளைச் செய்ய வாழ்க்கையை அர்ப்பணம் செய்வது மேலான தல்லவா? என்றாலும் எப்பொழுதும் ஓய்வில் லாமல் அதிகமான வேலைகளில் முழுகிவிடுதல் நல்லதாகாது.

உடலையும் நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். ஸ்நானம், சாப்பாடு முதலியவற்றி லும் உறக்கத்திலும் ஒழுங்கான முறைகளைக் கைக்கொள்ள வேண்டும்.

செய்யும் வேலையை அமைதியுடனும் அன் புடனும் செய்யவேண்டும். கண்டிப்பான சட்ட திட்டங்கள் தேவையில்லை. அன்புதான் குறிக் கோள். இளைஞர்கள் அன்புக்கு வசப்படுவார் கள். அதனால் கவரப்பட்டு உள்ளத்தையும் உயி ரையும்கூடக் கொடுப்பார்கள்.

என்னுடைய சிந்தனையால் நான் அறிந்து கொண்டது என்னவென்றால் மடத்தில் உள்ள வாலிபர்கள் பிழை செய்தால் அது என்னையே சாரும் என்பதுதான். எல்லாம் சீராக நடக்க வேண்டுமானால் நீ உன்னையே திருத்திக்கொள்ள முயலவேண்டும். உன்னுடைய குணங்களையும் நடைமுறைகளையும் கவனித்துக் கொண்டே இரு. நாம் பிறரிடம் குற்றத்தைக் கண்டால் அது நம்முடைய குறை எனக்கொள்ளவேண் டும் என்று ஸ்ரீராமகிருஷ்ணர் எங்களுக்குக் கற்பித்தார். நீ சிறப்படைய விரும்பினால் பிறரைச் சிறப்பிக்க வேண்டும்.

வாலிபர்களே, கவனியுங்கள். ஸ்ரீராமகிருஷ் ணருடைய வாழ்க்கை உங்களுடைய குறிக்கோ ளாக இருக்கட்டும். அவருடைய திருவடிகளைப் பின்பற்றினால் உங்களிடம் புதிய வலிமையும் சக்தியும் தாமே வரும் என்பதை நிச்சயமாக நம்புங்கள். அவர் சக்தியின் மூலமும் அவதார மும் ஆவார்.



# ஞானப் பொறிகள்

## விவேகானந்த வாக்கு

306. ஆத்மா என்பது மனமுங்கூட அல்ல. ஆத்மா மனதை இயக்குவிக்கிறது; மனதின் மூலம் உடலை இயக்குவிக்கிறது. நம்மில் ஒவ்வொருவரும் தனித்தனி ஆத்மாவைக் கொண்டுள்ளோம். தனியான சூட்சும சரீரத்தையும் கொண்டுள்ளோம். அதன்மூலம் ஸ்தூலமான புற உடலின்மீது செயற்படுகிறோம்.

307. இந்த ஆத்மா - இந்த மனித ஜீவன் - உடலும் இல்லை, உள்ளமும் இல்லை என்று ஆகுமானால் பிறகு என்னதான் அது? பலவேறு தத்துவ ஆராய்ச்சிகளும் இந்த ஒரு விஷயத்தில் ஒரே மாதிரியாகச் சொல்லி, ஒத்துப் போகின்றன. அதாவது இந்த ஆத்மா - அது யாதாக இருப்பினும் சரியே - உருவமற்றது, வடிவு அற்றது. உருவமோ வடிவோ இல்லாதது சர்வ வியாபியாகவே இருக்க வேண்டும்.

308. காலம், தேசம், காரணகாரியத் தொடர்பு — இவை மனதினிடமே உள்ளன. ஆத்மாவோ மனதிற்கு அப்பாலும் உருவமற்றதாகவும் இருப்பதனால் அது காலத் தைக் கடந்தும், தேசத்தைத் தாண்டியும், காரண காரியத்துக்கு அப்பாலுமே இருக்க வேண்டும். இப்படிக் கால தேச காரண காரியங்களுக்கும் அப்பால் இருப்பதனால், அது அனந்தமானதாகவே இருக்க வேண்டும்.

# டால்ஸ்டாய் சிந்தனையில் ஸ்ரீராமகிருஷ்ணர்

**ஏ. சுப்பிரமணியம்,** எம்.ஏ. செயலாளர்,
ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த மன்றம், ஆர்க்காடு

'புத்தர் என்பது மனிதர் இல்லை. அது ஒரு நிலை; (State) ஏசு என்பது மனிதர் இல்லை. அது ஒரு நிலை. புத்தரைப்போல் பிறர் துயரை உணரும் நெஞ்சைப் பெறுங்கள். நீங்கள் புத்த ராகலாம். ஏசுவைப் போல் பிறருக்காக உருகும் இதயத்தைப் பெறுங்கள். நீங்கள் ஏசுவாகலாம்' என்றார் விவேகானந்தர். அதுபோல் இராம கிருஷ்ணர் என்பதும் மனிதரல்ல; அது ஒரு நிலை! இராமகிருஷ்ணர்போல் உருகும், உண ரும் நெஞ்சை யார் பெறுகிறார்களோ அவர்கள் அந்த நிலையைப் பெறுகிறார்கள். அல்லது அந்த நிலையைப் புரிந்துகொண்டு பயன்பெறும் பேற் றைப் பெறுகிறார்கள்.

**விடியற்காலப் பனித்துளி**

வானத்திலிருந்து இறங்கிவரும் விடியற் காலப் பனித்துளி, மலர்வதற்குத் தயாராக இருக்கும் ரோஜாவின் அரும்புகளையெல்லாம், ஆரவாரம் இல்லாமல் மெதுவாக, மிக மெது வாக, தன் குளிர்ச்சியான காற்றோட்டத்தால் மலர வைப்பது போல் இராமகிருஷ்ண உணர்வு கள், அவர் உடல் மறைந்த பத்து ஆண்டு களுக்கெல்லாம் உலகம் முழுவதும் பரவி மலரத் தயாராக இருந்த ஆன்மிக இதயங்களை யெல்லாம் மலரச் செய்தன.

இங்கிலாந்தில், இருபது ஆண்டுகளுக்கும் மேலாக, இந்து சமய வேர்களான வேதங்களை ஓலைச்சுவடியிலிருந்து ஆங்கிலத்தில் அருமை யாக மொழிபெயர்த்து உலகில் பரப்பியவரும் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவருமாகிய பேராசிரியர் மாக்ஸ்முல்லர் அந்த ஆன்மிகப் பனித்துளியில் மலர்ச்சி பெற்றார். இராம கிருஷ்ணரின் உபதேசங்களையும், அந்த உபதேசத் திற்கு இலக்கியமாக அமைந்த அவர் வாழ்க் கையையும், ஆங்கிலத்தில் ஒரு பெரிய கட்டுரை யாக எழுதி, ஆங்கிலம் தெரிந்த உலகம் முழுதும் பரப்பினார்.

நோபிள் பரிசுபெற்றவரும், ஆன்மிக ஊற் றில் ஆழ்ந்து மூழ்கியவருமான பிரஞ்சுக் கிறித் துவர் ரோமன் ரோலண்ட், ஸ்ரீ ராமகிருஷ் ணரின் வாழ்க்கை வரலாற்றையும், உபதேசங் களையும் ஒரு பெரிய நூலாக எழுதி பிரஞ்சு தெரிந்த இடமெல்லாம் இராமகிருஷ்ணரின் புகழைப் பரப்பினார். அதன்பிறகு அந்த இனிமையான-மென்மையான ஆனால் மிக வலிமையான ஆற்றல் பிரான்சின் எல்லையையும், ஐரோப்பாவின் எல்லையையும் கடந்து, ரஷ்ய நாட்டிற்குள் நுழைந்தது.

**டால்ஸ்டாய்**

கிறிஸ்தவர்களில் எல்லாம் சிறந்த கிறிஸ்த வர் என்றும், உலகச் சிந்தனையாளர்களில் ஒரு சிறந்த சிந்தனையாளர் என்றும், உலக நாவ லாசிரியர்களில் தலைசிறந்த ஒருவர் என்றும், போற்றப்பட்டவரும், இவைகளுக்கும் மேலாக, தான் பிறந்த பிரபுக்குலத்துக்கே இயல்பான, ஆடம்பரங்களையெல்லாம் வீசியெறிந்துவிட்டு, ஏழைகளோடு ஏழையாக தன் நிலத்தில் உழைத்து, அந்த உழைப்பால் வந்ததை உண்டு ஏழைகளோடே வாழ்ந்து ஐரோப்பாவில் ஓர் ஆன்மிக மலர்ச்சியை உண்டாக்கியவரும், மகாத்மாகாந்தி முதலிய ஆழ்ந்த சிந்தனையாளர் களின் சிந்தனைகள் மேலும் தூண்டுதல் பெறக் காரணமாக இருந்தவருமான டால்ஸ்டாய் நெஞ்சிலும், ஸ்ரீராமகிருஷ்ண தெய்விக அலை கள் சென்று தாக்கின. மாக்ஸ்முல்லர், ரோமன் ரோலண்ட் போலவே ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்களும் வாழ்க்கையும் டால்ஸ்டாய் நெஞ்சைப் பெரிதும் ஈர்த்தன. அதுபற்றிய விவரங்களையெல்லாம் அலெக்சாண்டர் ஸிப் மென் தாம் எழுதிய 'டால்ஸ்டாயும் இந்தியா வும்' என்ற நூலில் தெளிவாகவும் விரிவாகவும் எழுதுகிறார்.

**இறுதி காலத்தில்**

டால்ஸ்டாய் தான் வாழ்ந்த காலத்தில் ஐரோப்பாவிலும் ரஷ்யாவிலும் இருந்த ஏழை மக்களின் உயிரைக் குடிப்பதான சமுதாய அமைப்பின்மீது பெரிதும் வெறுப்பு கொண் டார். அந்தச் சமுதாய அமைப்பிற்குத் துணை

நிற்கும் கருவியாக அந்நாட்டுச் சமய அமைப்புக்களும் இருந்தது, அவர் ஆத்திரத்தை மேலும் அதிகமாக்கியது. ஏழைகள் வாழ்வு, ஏழைகள் வாழ்வு என்று துடித்த கருணை மிக்க அவர் நெஞ்சம், தன்னைச் சுற்றி இருந்த பயங்கரமான அமைப்புக்களிலிருந்து விடுதலை பெற உலகச் சமயங்கள், தெய்விக மனிதர்களின் உபதேசங்களின் பக்கம் திரும்பியது. உலகச் சமய நூல்களையும், அவற்றின் உபதேசங்களையும் அவர் படித்தார். இந்து சமயத்தின் பல்வேறு சித்தாந்தங்களையும் பல ஆசாரியார்களின் உபதேசங்களையும் கற்றார். ஆனல் இறுதியில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்வும் உபதேசங்களுமே அவர் நெஞ்சைக் கவர்ந்தன. அது குறித்து அலெக்சாண்டர் ஸிப்மென் எழுதுகிறார்:

''டால்ஸ்டாயின் இறுதிப் பத்தாண்டு கால வாழ்வில் ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடரான விவேகானந்தரும் அவர் சிந்தனையைப் பெரிதும் கவர்ந்தனர். தத்துவஞானியும், உபதேசகருமான ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றி அவருடைய சீடர்கள் எழுதியவைகளும்- குறிப்பாக பிற்காலத்தில் அவருடைய தலைமைச் சீடரான, விவேகானந்தர் விரிவாகச் செய்த சொற்பொழிவின் கட்டுரையும் அவர் நெஞ்சைக் கவர்ந்தன.''

**துயரச் சமவெளியில்**

''அதன் பிறகு ரஷ்ய எழுத்தாளர் ஜெ. நொஷ்விங் என்பவர் தொகுத்து வெளியிட்ட 'துயரச் சமவெளியில்' என்ற தொகுப்பு நூலின் மூலம் டால்ஸ்டாய் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப் பற்றிச் சற்று விரிவாகவும் தெளிவாகவும் தெரிந்து கொண்டார். அந்தத் தொகுப்பில் விவேகானந்தர் 1895 ஆம் ஆண்டு நியூயார்க்கில் ஸ்ரீ ராமகிருஷ்ணரைப்பற்றி மிக விரிவாகவும், அற்புதமாகவும் பேசிய 'எனது குருநாதர்' என்னும் கட்டுரை சேர்க்கப்பட்டிருந்தது.''

''டால்ஸ்டாய் நெஞ்சில் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஆழமாகப் பதிந்ததற்குக் காரணம், அவர் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்தார் என்பதும், எளிமையாக-ஏகாந்தமான வாழ்வு அவர் வாழ்ந்தார் என்பதுமே ஆகும்.''

''ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் மிகச் சிறந்தவை. அதில் தெய்விக அற்புதங்கள் அதிகமாகவே கலந்துள்ளன. ஆனல் மற்ற இந்திய ஞானிகளைப் போல அவர் இந்த உலகம் ஒரு மாயை என்ற கொள்கை உடையவர் அல்ல. உலகம், பிரம்மம் எனப்படும் அளக்க முடியாத முழுமையான ஓர் ஆற்றலின் உருவாக்கம். மனிதனுடைய ஆன்மா அந்த ஆற்றலில் ஒரு துளி. ஆன்மாவின் முடிவான குறிக்கோள், அந்த உலகமயமான பிரம்மத்தில், வானத்திலிருந்து விழும் சிறு மழைத்துளி பெருகிய கடல்நீரோடு கலப்பது போல் கலந்து விடுவதாகும் என்று அவர் கூறுகிறார்.''

**ஒற்றுமை இருக்கிறது**

''டால்ஸ்டாய் ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விக அம்சங்களைப் பற்றிய கருத்துக்களை ஏற்றுக் கொள்ளவில்லை. ஆனல் அவர் ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறும் மனிதனின் அற்புதமான- உன்னதமான உயர்வை அப்படியே ஏற்றுக்கொண்டார். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் 'எல்லாச் சமயங்களும் நல்லவையே; அவை யாவும் ஒரே இறைவனைக் காணச் செல்லும் சமமான பாதைகளே' என்னும் கருத்தை அவர் மிகவும் விரும்பினர். குறிப்பாக ஸ்ரீ ராமகிருஷ்ணரின் நீதிமொழிகள் அவர் நெஞ்சைப் பெரிதும் கவர்ந்தன. ஜமீன்தார்கள், பெரிய பணக்காரர்களின் கீழ் நலிந்து கிடந்த இந்திய மக்களிடையே ஸ்ரீ ராமகிருஷ்ணர் கருத்துக்கள் வேகமாகப் பரவியது போல், ரஷ்யாவிலும் பரமஹம்சருடைய நீதிக் கருத்துக்களை டால்ஸ்டாய் பரப்ப விரும்பினர்.''

'1903 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 13ஆம் தேதி டால்ஸ்டாய் தன்னுடைய நண்பர் ஒருவரால் ஜெர்மனியிலிருந்து அனுப்பப்பட்ட தியோசோபிஸர் வெர்விஸ்டர் என்னும் பத்திரிகையைப் படித்தார். அதில் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய நீதி மொழிகள் வெளியிடப்பட்டிருந்தன. அதைப் படித்த டால்ஸ்டாய் மிகவும் மகிழ்ந்து அவைகளின்கீழ் அடிக் கோடிட்டு அந்தப் பத்திரிகையைப் பத்திரமாக வைத்திருந்தார். அவர் வழக்கமாக் வாழ்நாள் முழுதும் எழுதி வந்த நாட்குறிப்பில், அன்றைக்கு அதைப் படித்ததைக் குறிப்பிட்டு, 'என் கொள்கைக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் நீதி மொழிகளுக்கும் மிகுந்த ஒற்றுமை இருக்கிறது' என்று எழுதி வைத்திருக்கிறார்.''

**அற்புதமான உபதேசங்கள்**

''அதன் பிறகு 1906 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் டால்ஸ்டாய் தன்னுடைய நண்பரும்,

வாழ்க்கை வரலாற்று ஆசிரியருமான பி. ஏ. ஸெர்ஜின்கோவிடமிருந்து 1905 ஆம் ஆண்டு சென்னையில் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்ட ‘ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசங். கள்’ என்ற நூலைப் பெற்றார். தன் நெருங்கிய நண்பர்களிடமும், சுற்றத்தாரிடமும் மிகுந்த மகிழ்ச்சியோடு அதில் பல உபதேசங்களைப் படித்துக் காட்டி, ‘அற்புதமான உபதேசங்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் மறைந்து போனார். அவர் ஓர் அற்புதமான பாராட்டத்தக்க ஞானி’ என்று மகிழ்ச்சியோடு கூறினார்.’’

‘‘ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்களில் இருந்து டால்ஸ்டாய் ஏறக்குறைய நூறு உபதேசமொழிகளையும், உருவகக் கதைகளையும் ரஷ்ய மொழியில் வெளியிடுவதற்குத் திரட்டினார். ஆனால் என்ன காரணத்தாலோ அவை நூல் வடிவில் வெளியிடப்படாமலேயே போய் விட்டன. என்றாலும் டால்ஸ்டாய் அவற்றில் சில கதைகளைத் தாம் அப்போது வெளியிட்டுக் கொண்டிருந்த ‘பழைய ஞானம்’ என்ற நூலில், அவைகளில் இருந்த தெய்வமயமான சூழலையும், அமைப்பையும் நீக்கிவிட்டு, மிக எச்சரிக்கையாக அதன் அடிப்படை கொஞ்சமும் கெடாமல் சேர்த்து வெளியிட்டுள்ளார்.’’

**ஆள் மாற்றம்! இடம் மாற்றம்!**

டால்ஸ்டாய் அப்படிச் சேர்த்த கதைகளில் யார் மனத்திலும் தான் மிகுந்த பக்திமான் என்ற அகங்காரம் வரக்கூடாது என்பதற்காக நாரதரையும் மகா விஷ்ணுவையும் வைத்து ஸ்ரீ ராமகிருஷ்ணர் கூறிய கதையும் ஒன்றாகும். டால்ஸ்டாய் இதில் உள்ள தெய்விகச் சூழலை அடியோடு மாற்றிவிட்டு, ஆனால் அதன் அடிப் படையான நீதி மாறாமல் அமைத்துள்ளார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கதையில் நிகழ்ச்சி வைகுந்தத்தில் நடக்கிறது. டால்ஸ் டாய் அது பூமியில் நடப்பதாக அமைத்திருக் கிறார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் கதையில் வரும் பாத்திரங்கள் நாரதர், விஷ்ணு முதலிய தெய் வங்களே. டால்ஸ்டாய் அவர்களை மனிதர்களாக மாற்றியிருக்கிறார். ஸ்ரீ ராமகிருஷ்ணர் கதை யில் நாரதர் எண்ணெய் நிரம்பிய கிண்ணத்தை எடுத்துக்கொண்டு உலகம் முழுவதையும் சுற்றி வருவதற்குப் பதிலாக, டால்ஸ்டாய் தன் அமைப்பில் ஒரு சன்னியாசி எண்ணெய் நிரம்பிய கிண்ணத்தை எடுத்துக்கொண்டு எந்தக் குடியா னவன் பக்தியிலிருந்து தான் ஏதாவது கற்க முடியுமா என்று பார்க்கிறாரோ அந்தக் குடியானவன் இருக்கும் கிராமத்தைச் சுற்றி வருகிறார். ஆனால் ஸ்ரீ ராமகிருஷ்ணர் பக்தியின் சிறப்பை நாரதரை வைத்துக் கொண்டு கூறுவது போல், டால்ஸ்டாய் அந்த சன்னியாசிக்கு உணவு தரும் குடியானவனின் உயர்வையும், உழைப்பின்மூலம் செய்யும் அவன் வழி பாட்டையும் இங்கு உயர்த்திக் காட்டுகிறார். இவ்வாறு டால்ஸ்டாய் ஸ்ரீ ராம கிருஷ்ணரின் பல கதைகளைத் தன் நூலில் அமைத்து வெளியிட்டுள்ளார்.



**இ**ந்தியாவின் முன்னேற்றத்தைக் குறித்து வாயால் மட்டும் பேசிக் கொண்டிருப்பவர்கள், எதை வேண்டுமானாலும் சொல்லிக்கொண்டிருக்கட்டும். இந்த நாட்டின் முன்னேற்றத்திற் காகவே உழைத்து வரும் ஒருவன் என்ற முறையில் நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது இது தான். நாம் மீண்டும் ஆன்மிக உணர்ச்சியைப் பெறும்வரை நமது தாயகம் முன்னேற்றமடைய முடியாது. நமது நாட்டின் முன்னேற்றம் மட்டுமல்ல, உலகின் முன்னேற்றமே இதைத்தான் பொறுத்திருக்கிறது.

**—சுவாமி விவேகானந்தர்.**



# சுவாமி சுத்தானந்தரின் வாழ்க்கை

சுவாமி தன்மயானந்தர்

“நான் சொல்கிறேன். உங்களில் ஒருவர் எழுதுங்கள்.’’

1897 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தின் கடைசி. ஆலம்பசார் மடத்தின் அறையில் சாதுக்கள், பிரம்மசாரிகள் மத்தியில் சுவாமி விவேகானந்தர் உட்கார்ந்தபடி அங்கு கூடியிருந்த சன்னியாசிகள், பிரம்மசாரிகளைப் பார்த்து, ராமகிருஷ்ண மடத்தின் குறிக்கோள், செயல்முறை, சாது பிரம்மசாரிகளின் வாழ்க்கை முறை ஆகியவைகளைக் குறித்து சில விஷயங்களைச் சுருக்கமாக எழுதிக்கொள்வதற்காகக் கட்டளையிட்டார்.

சுவாமிஜியின் முன்பு நேராக உட்கார்ந்து கொண்டு, நெருப்புக் குழம்பு போன்று அவர் வாயிலிருந்து வரும் வார்த்தைப் பிரவாகத்தைக் கிரகித்து ஏற்றுக்கொள்ள, அங்கு கூடியிருந்தவர்களில் யாருக்குமே அன்று தைரியம் எழவில்லை. ஒருவர் மற்றொருவரை முன்தள்ளிக் கொண்டிருந்தார். ஆனால் எவரும் முன்வரவில்லை.

கடைசியில் ஒருவர், கையில் காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக்கொண்டு சுவாமி விவேகானந்தரின் அருகில் வந்து கணேசனைப் போல எழுத உட்கார்ந்து கொண்டார். வயதில் இளைஞராக இருப்பினும் மடத்தில் பிரம்மசாரியாகச் சேர்ந்து சில நாட்களே ஆகியிருந்த போதிலும் அந்த சீடர் சுவாமிஜியின் கருத்துக்களை ஏற்றுக் கிரகித்துக் கொள்ளக்கூடிய தகுதி வாய்ந்தவராக இருந்தார். ‘நான் சொல்கிறேன். உங்களில் ஒருவர் எழுதுங்கள்’ என்ற விவேகானந்தரின் குரலுக்குப் பதில் அளித்த இவர், பிற்காலத்தில் சுவாமி சுத்தானந்தர் என்ற பெயரோடு, யுகநாயகராகிய விவேகானந்தரின் கருத்துக்களுக்கெல்லாம் ஒரு விளக்கமாக வாழ்ந்து, அனைவருடைய நம்பிக்கைக்கும் அன்புக்கும் பாத்திரமாக இருந்தார்

சுவாமி சுத்தானந்தருடைய முழு வாழ்க்கையும் வேதாந்தமே வடிவெடுத்து வந்தாற்போல விளங்கியது. பல சாஸ்திரங்களைக் கற்றிருந்த சுத்தானந்தரின் வாழ்க்கையில் கர்மயோகமும் வேதாந்தமும் வியப்பிற்குரிய வகையில் ஒன்று பட்டுக் கலந்திருந்தன. இது அவருடைய ஒப்பிடமுடியாத வியப்பிற்குரிய குரு பக்தியாலும் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்க சேவையில் அவருக்கிருந்த ஈடுபாட்டாலும் விளைந்த அற்புதமாகும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண இயக்கத்தின் வரலாற்றில் சுவாமிஜியின் சீடராகிய இவருடைய வாழ்க்கை மறக்க முடியாத மிகச் சிறந்த அத்தியாயமாக இருந்து ஒளி வீசுகிறது. விவேகானந்தருடைய நூல்களில் பெரும் பகுதியை வங்கமொழியில் மொழி பெயர்த்தவர் என்ற முறையிலும், விவேகானந்தரின் கருத்தை மிகச் சிறப்பாக எடுத்துக்காட்டி விளக்கியவர் என்ற முறையிலும் வங்க இலக்கியத் துறையிலும் ஆன்மிக வரலாற்றிலும் அழியாத இடம் இவருக்கு இருந்து கொண்டிருக்கிறது.

சுத்தானந்தரின் மொழி பெயர்ப்புகளால் தான் விவேகானந்தரின் கருத்துக்கள் வங்க மக்களிடையே பரவின.

இவருடைய இயற்பெயர் சுதிர் சந்திர சக்கரவர்த்தி. இவருடைய பெற்றோர் கல்கத்தாவில் ஸர்ப்பெண்ட்டெயின் லேன் பகுதியில் குடியிருந்தனர். ஆசுகோஷ் சக்கரவர்த்தி நேர்மையும் தயாள குணமும் நிறைந்த ஒரு பிராம்மணர். இவருக்கு 1872 ஆம் ஆண்டு சுதிர் சந்திரர் பிறந்தார். இவருடைய இளைய சகோதரர், சுசுல் சந்திரர் என்பவர்; பிற்காலத்தில் சுவாமி பிரகாசானந்தர் என்ற பெயரில் விவேகானந்தரின் சீடர்களில் ஒருவராகத் திகழ்ந்தார்.

சுதிர் சந்திரர் இளமையிலிருந்தே ஆன்மிக வாழ்க்கையில் ஈடுபாடு கொண்டிருந்தார். சன்னியாசிகள் பெயரைக் கேட்டாலே அவர்களைக் காணச் செல்வார். சம வயதுடைய நண்பர்களோடு சாஸ்திரங்களைப் படிப்பதும்

அவற்றின் தத்துவங்களை ஆலோசிப்பதும் இவ ரிடம் இயல்பாகவே காணப்பட்டன. சுதிர், படிப்பில் சிறந்த புத்திசாலி மாணவராகத் திகழ்ந்தார். பள்ளிப்படிப்பில் குறிப்பிடத்தக்க மாணவராக விளங்கி சிடி காலேஜில் எப். ஏ. படிப்பதற்காகச் சேர்ந்தார்.

அப்போது முதல் அவருடைய ஆன்மிக வாழ்க்கையின் போக்கு புதிய ஓர் உத்வேகம் பெற்று, ஏதாவது ஒரு வழியை ஆவலோடு எதிர் நோக்கியிருந்தது. இவருடைய இந்த எண்ணம் மேலும் மேலும் வளரும் வகையில் சில நண்பர் சாதகமாக வாய்த்தனர். காகேன், காளிகிருஷ்ணன், ஹரிபத் கோவிந்தன் (சுகூர்) முதலியவர்கள் இவர்களில் குறிப்பிடத்தக்கவர் கள். பிற்காலத்தில் இவர்கள் முறையே விமலா னந்தர், விரஜானந்தர், போதானந்தர், ஆத்மா னந்தர் என்ற பெயரில் ஸ்ரீ ராமகிருஷ்ண விவே கானந்த இயக்கத்தில் தலைசிறந்த சன்னியாசி களாகத் திகழ்ந்தார்கள்.

சுதிர் மேற்குறிப்பிட்ட நண்பர்களுடன் ஆன் மிக நூல்களைப் படித்தல், தத்துவங்களைக் குறித்து ஆலோசித்தல், பக்திப்பாடல்களைப் பாடுதல் முதலியவற்றில் ஆழ்ந்து ஈடுபட்டிருந் தார். இவர்கள் பெரும்பாலும் கசேனுடைய வீட்டில் கூடி மேற்குறிப்பிட்டவைகளில் ஈடு பட்டனர்.

சுதிர் ஒரு கழகம் நடத்தி வந்தார். அந்த மன்றத்தில் அவர்கள் வங்கமொழியிலும், ஆங் கிலத்திலும் மத சம்பந்தமான சொற்பொழிவு கள் நிகழ்த்திப் பேச்சாற்றலை வளர்த்துக் கொண்டனர்.

ஆரிய மிஷன் இன்ஸ்டிடியூட்டைச் சேர்ந்த வர் ஷியாமசரன் லாஹரி; இவருடைய மாண வர் பாஞ்சான்ய பட்டாச்சாரியார், பல இளைஞர்களுக்கு யோகப்பயிற்சி அளித்து வந் தார். சுதிரும் அந்தப் பயிற்சியில் கலந்து கொண்டார். அவர் எதில் ஈடுபட்டாலும் அதில் மிகவும் ஊக்கம் காட்டினார். யோகாப்பியாசப் பயிற்சிகளில் ஈடுபட்ட சமயத்தில் இவர் தமது உணவு, உடை முதலிய விஷயங்களில் அதிகக் கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்து வந்தார். உடலில் சட்டை போடாமல் வெறும் மேல் துண்டுடன் வெறும் காலுடன் நடப்பார்; கல் லூரிக்கும்கூட இந்த நிலையிலேயே செல்வார். ஒருசமயம் சிடி கல்லூரி பேராசிரியர் ஹேரம் பனமித்திரர் உடை முதலியவற்றில் சுதிர் அநாகரிகமாக இருப்பதாகவும் இது இந்து பண்பாட்டிற்கு ஏற்றதன்று என்றும் சுதிரைக் கடிந்துகொண்டிருக்கிறார்.

கசேன், காளிகிருஷ்ணன் முதலிய சில நண்பர்களுடன் சுதிர் முதன்முறையாக தட்சி ணேஸ்வரம் சென்றார். அன்று இரவை தட்சி ணேஸ்வரத்திலேயே கழிப்பது என்று அவர்கள் முடிவு செய்திருந்தார்கள். பஞ்சவடியில் இரவு முழுவதும் தியானத்தில் இன்பமாகப் பொழு தைப் போக்கினர். காளி கோயிலின் மடப்பள்ளி யிலிருந்து எளிதாக இவர்களுக்கு அரிசி, பருப்பு, உப்பு, கட்டை, சமையல் பாத்திரங்கள் ஆகி யவை கிடைத்தன. இவைகளைக் கொண்டு கிச்சடி தயாரித்துச் சாப்பிட்டனர்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்தூல உடலில் அவ்வமயம் தட்சிணேஸ்வரத்தில் வாழ்ந்து வந் தார். சுதிர் ஸ்ரீராமகிருஷ்ணரை நேரடியாகக் காணும் வாய்ப்பைப் பெறாவிட்டாலும், அன்று முதல் அவருக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் பெயரில் ஈடுபாடும் கவர்ச்சியும் ஏற்பட்டன. இதை சுதிர் அந்நாளில் எழுதிய ஒரு கடிதத்திலிருந்து அறிய வருகிறோம்.

''என்னுடைய வாழ்க்கையைப் பற்றி அதிக மாகச் சொல்வதற்கு என்ன இருக்கிறது? ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்தூல உடலில் வாழ்ந்த காலத்தில் நான் சிறுவனாக இருந்தேன். ஆயி னும் பலரிடமிருந்தும் அவருடைய உபதேசங் களைக் கேட்டிருந்தேன். மேலும் அப்போது வெளியாகியிருந்த ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உப தேசங்கள் அடங்கிய வெளியீடுகளைப் படித் திருந்தேன். இருப்பினும் துரதிஷ்டவசமாக அவரை நேரில் தரிசிப்பதற்காக நான் செல்ல வில்லை.'' *(13-11-1937)*.



# சக்கரம் தூக்கிய சலந்தரன்

'கைலாஸ்'

கர்வத்தைத் தலைக்கனம் என்று சொல்வார்கள் அல்லவா? உண்மையி லேயே தலையின் கனம் அதிகரித்துக்கொண்டே போனால் என்ன ஆகும்? தலையின் கனமே தாங்க முடியாமற் போய் இறப்பு நேரிடும்.

முன்னொரு காலத்தில் சலந்தரன் என்ற அசுரன் இருந்தான். அவன் தவங் களும் யாகங்களும் பல செய்து நிறைய வரங்களைப் பெற்றிருந்தான். தேவர்கள், மனிதர்கள் ஆகிய எல்லாரையும் அவன் வென்று விட்டான். அதனால் அவனுடைய அகந்தை அதிகரித்தது. கயிலைவாழ் ஈசனையும் வென்றுவிட அவன் ஆவல் கொண் டான். அதற்காகப் படை திரட்டிக் கொண்டு அவன் இமயத்தை நோக்கிப்புறப் பட்டான்.

அவனுடைய மனைவியும் மந்திரிகளும் தகாத அந்தச் செயலில் ஈடுபட வேண்டாம் என்று பல முறை தடுத்தும் அவன் செவிசாய்க்கவில்லை.

கயிலாயத்தில் உமையவளுடன் அமர்ந்திருந்த ஈசன் தம் ஞானநோக்கால் சலந்தரன் வருவதை அறிந்துகொண்டார். தம்மை எதிர்ப்பது தவறு என்று உணர்ந்து, கடமையின் காரணமாகச் சலந்தரனுடன் வந்த மந்திரிகளையும், படைகளையும் அழிக்க அவர் விரும்பவில்லை. சலந்தரனை மட்டும் அழிக்க எண்ணிய அவர் புன்முறுவல் பூத்தார்.

ஒரு வயது முதிர்ந்த அந்தணர் போல ஈசன் உருமாறினார். கயிலையை விட்டு இறங்கிய எம்பெருமான் சலந்தரன் வரும் பாதையில் காத்திருந்தார். அவன் தன் பரிவாரங்களோடு அங்கு வந்து சேர்ந்தான். பெரியவர் அவன் எதிரில் சென்று நின்றார். ''படையுடன் செல்லும் நீ யாரப்பா?'' என்று நடுங்கும் குரலில் அவனைக் கேட்டார்.

''ஐயா பெரியவரே, என்னைச் சலந்தரன் என்று அழைப்பார்கள். நான் இப்போது பரமசிவனோடு போரிடுவதற்குப் போய்க்கொண்டிருக்கிறேன். வழியை விட்டு ஒதுங்கி நில்லும். யாராவது தள்ளிவிடப்போகிறார்கள்!'' என்றான்.

''ஓ!'' என்று தலையை மெல்ல ஆட்டினார் அந்தப் பொல்லாத மாயக் கிழவர். ''அப்பா சலந்தரா, சிவனுடன் பொருதுவதற்கு ஏற்ற அளவு சாமர்த் தியம் உனக்கு இருக்கிறதா என்று இந்தத் தள்ளாத கிழவன் சோதித்துப் பார்க்க லாமா?''

கிழவரின் கேள்வியைச் செவிமடுத்த சலந்தரன் உரக்கச் சிரித்தான். கிழ வரை அவன் கொன்றுவிடாதிருக்க வேண்டுமே என்று மற்றவர்கள் அஞ்சினார்கள்.

''ஒரு தள்ளாத கிழவரான நீங்கள் என்னைச் சோதிக்கப் போகிறீர்களா?'' என்று அவன் இறுமாப்புடன் கூறினன். ''ம்! செய்து பாருங்கள்!''

உடனே அந்தணர் வேடத்தில் இருந்த சிவபெருமான் தரையில் தம் கையிலிருந்த தடியால் கீறினர். அந்த இடத்தில் ஒரு சக்கரம் தோன்றியது. ''சலந்தரா, இந்தச் சக்கரத்தை மட்டும் நீ உன் தலைக்கு மேல் தூக்கிவிட்டா யானல் நீ அந்தச் சிவபெருமானை நிச்சயமாக வெற்றிகொள்வாய்'' என்று அவர் கூறியதும் சலந்தரன் இன்னும் அட்டகாசமாகச் சிரித்தான்.

தன்னுடைய ஒரு கையால் அதை அலட்சியமாகத் தூக்க அவன் முயன் ருன். ஆனல் அதை அசைக்கக்கூட அவனல் முடியவில்லை. பிறகு இரண்டு கைகளா லும் முயன்ருன். அப்போதும் அது கனமாக இருந்தது. தன் முழுப் பலத்தையும் சேர்த்துக் கஷ்டப்பட்டுத் தலைக்கு மேல் அதைத் தூக்கினன்.

அவனுடைய கால்கள் தள்ளாடின. அவன் கைகள் தொய்ந்தன. அந்தச் சக்கரம் அவனுடைய கையிலிருந்து தவறி அவனுடைய தலைமேலேயே விழுந்தது. தலை பிளக்கப்பட்ட சலந்தரன் அந்த இடத்திலேயே உயிர்துறந்தான். அவன் ஈச னுடைய அருளால் இறந்தமையால் அவனுடைய உயிர் அவருடைய பூதகணங் களில் ஒன்ருகச் சேர்ந்தது.

அவனைச் சேர்ந்த மந்திரி பரிவாரங்களுக்கு எம்பெருமானர் தம் வடிவைக் காட்டி அருள்புரிந்து மறைந்தார்.



# நாங்கள் சென்ற நற்பயணம்!

திருமதி **கோகிலா காளஹஸ்தி**

*தாளாளர், ஸ்ரீ சாரதா வித்யாலயா பெண்கள் மாடல் உயர்நிலைப் பள்ளி, சென்னை-17.*

**வாராணசி என்ற காசிக்ஷேத்திரம்**

எல்லாப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் தலை யாயது காசி. ஸ்ரீவிச்வநாதர் — ஜகத்திற்கெல் லாம் நாதனுக விளங்குபவர்—அங்கே கோயில் கொண்டுள்ளார். பிரபஞ்சத்திற் கெல்லாம் தாயானவளும், உயிர்களுக்கெல்லாம் உடலுக்கு உணவும் உயிருக்கு ஞானமும் அளிப்பவளுமான அன்னை அன்னபூரணி உறையுமிடமும் காசியே. மகாஞானிகளும் துறவிகளும் பண்டிதர்களும் உறையுமிடமும் காசி. விச்வநாதர் 'ராம' நாமத்தைத் தாரக மந்திரமாக உயிர்களுக்கு ஓதி, முக்தியளிக்கும் முக்தி ஸ்தலமும் காசி. பல வகையாலும் மேன்மையான இந்த ஸ்தலத் திற்கு யாத்திரை செய்யாத மகான்களே கிடை யாது எனலாம்.

அலகாபாத் ஆசிரமத்திலிருந்து போன்மூலம் எங்கள் வருகையை அறிந்த காசி ஸ்ரீராம கிருஷ்ண சேவாச்ரமத்தின் உதவிச்செயலர் ஸ்ரீமத் சுவாமி சுத்தவ்ருதானந்தஜி ஒரு பிரம்ம சாரியை ரயிலடிக்கு அனுப்பி எங்களை வரவேற்று எல்லாவித சௌகரியங்களையும் செய்து உதவி னர். மடத்தைச் சார்ந்த ஒரு விடுதியில் தங்கி னேம். சுவாமிஜியே ஒரு கால அட்டவணை தயாரித்து அதன்படி பார்க்க வேண்டிய, போக வேண்டிய இடங்களைக் குறித்துத் தந்தார். அது ஒரு பேருதவியாகும்.

மறுநாள் (13-ஆம் தேதி) கங்கா ஸ்நானத் திற்குச் சென்ருேம். அன்று பூர்ணிமா நாள். பகவான் புத்தர் பிறந்த நாளும், போதி மரத் தடியில் போதம் அடைந்த நாளும் மகா நிர்

வாணம் எய்திய நாளும் அந்தப் பௌர்ணிமியே யன்றோ! அன்று இரவே சந்திரகிரஹணமும் ஏற்படவிருந்தது. கங்கையில் நீராடவும் பல தெய்வ மூர்த்தங்களைத் தரிசிக்கவும் ஏராளமான யாத்திரிகர் கூட்டங் கூட்டமாக காசிக்கு வந்து கொண்டே இருந்தனர். தெருக்களில் நடக்கக்கூட இடமில்லாமல் நெரிசல் இருந்த படியால் முட்டி மோதிக்கொண்டு போகவேண்டியதாயிற்று. ஒருவரையொருவர் கைகோத்துக்கொண்டு — சர்க்கஸில் யானைகள் ஒன்றின் வாலை ஒன்று பற்றிக்கொண்டு போவதுபோல கங்கையின் படித்துறையை வந்தடைந்தோம். கங்கா ஸ்நானம் ஆன பின்பு ஒரு படகை அமர்த்திக் கொண்டு நான்கு மணிநேரம் கங்கையில் மிதந்தோம். பஜனையும் பக்திப்பாடல்களும் பாடி அனுபவித்தது மகிழ்ச்சியைத் தந்தது.

காசியில் 64 கட்டங்கள் (படித்துறைகள்) இருக்கின்றன. 56 கட்டங்களைக் கண்டோம். கேதார்காட், மணிகர்ணிகா காட் என்ற இந்த 'காட்'களில் சங்கல்பத்தோடு புனித ஸ்நானம் செய்து பின்பு ஹரிச்சந்திரா கட்டத்தில் மயானக்காட்சியைத் தரிசித்தோம். ஹரிச்சந்திரன் சத்தியத்திற்காகச் செய்த தியாகம் பட்ட துன்பம், சேவகம் எல்லாம் எங்கள் ஞாபகத்திற்கு வந்தன. மணிகர்ணிகா காட்டில் மரித்த உயிர்களுக்குச் சிவபெருமான் தாரக மந்திரத்தை உபதேசித்து உய்விப்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் திவ்யக் காட்சியில் கண்டதை நினைத்து பரவசப்பட்டோம்.

விச்வநாதர், விசாலாக்ஷி, அன்னபூர்ணாதேவி திருக்கோயில்களுக்குச் சென்று தரிசித்தோம். விச்வநாதருக்கு நாமே கங்காபிஷேகம் செய்து வில்வம், மலர் ஆகியவற்றால் அர்ச்சித்து வணங்கலாம். நாங்கள் தங்கிய அந்தச் சில நாட்களில் பலவித அநுபவங்களை அடைந்தோம். ஒருநாள் மாலையில் அன்னபூரணியைத் தரிசித்து விட்டு இரவு எட்டு மணிக்கு விச்வநாதர் கோயிலில் நடக்கும் சப்தரிஷி பூஜையைக் காணச் சென்றோம். ஒருவர் தலைமையில் ஏழு பூஜாரிகள் பூஜையில் ஈடுபட்டனர். விச்வநாதருக்கு அபிஷேகம், அலங்காரங்கள் செய்வது கண்கொள்ளாக்காட்சி. பூஜை செய்யும்போது அந்த எழுவரும் தம்மை மறந்து ஸாம கானம் பாடியதும், ஒருவர் தாள வாத்தியம் வாசித்ததும், தூப தீப நைவேத்தியங்களைப் படைத்ததும் கண்டு எங்கள் உள்ளங்கள் எல்லாம் நிறைவுற்றன. உள்ளமுருக்கும் காட்சி அது. பூஜைமுடிந்ததும் இமைப்பொழுதில் அலங்காரங்களைக் கலைத்துப் பூஜாரிகள் மறைந்ததும் எங்களுக்கு வியப்பாக இருந்தது! ஏனோ அப்படிச் செய்தார்கள்!

**அநாதிநாதரின் அநாதி நிலைமை**

விச்வநாதர்—சிவபெருமான்—ஆதியும் அந்தமும் இல்லாதவர். ஆதியற்றவர், ஆகையால் அநாதியானவர். விச்வமாகிய பிரபஞ்சத்திற்கெல்லாம் நாதநாகிய (விச்வநாதர்) அவரது உறைவிடமாகிய அந்தத் திருக்கோயில் எவ்வளவு அசுத்தமாக வைக்கப்பட்டுள்ளது! துப்புரவு, சுத்தம் என்பதையே அறியாதவர்கள் போல அங்குள்ள மக்கள் கோயிலை அசுத்தப் படுத்துகிறார்கள்; அசுத்தமாகவே இருக்கிறது. அநாதை போலவே விச்வநாதரும் இந்த அசுத்தச்சூழ்நிலையில் இருக்கிறார். 'ஏ விச்வநாதா! இந்த அசுத்தம் உன் ஆரோக்கியத்திற்குக்கேடு விளைவிக்காதா? நீயோ எல்லோருக்கும் மங்களத்தைச் செய்யும் சிவன்; நன்மை புரியும் சங்கரன். உன்னைச் சுற்றி இவ்வளவு அசுத்தமா! சிவசிவா! என்ற எண்ணம் உண்டாயிற்று. அவனோ, 'நான் ஆலகால விடமுண்டவனல்லவா யிற்றே! என்னை இதெல்லாம் என்ன செய்யும்? என்று கூறுவது போல உணர முடிந்தது. தென்னாட்டிலுங்கூடப் பல கோயில்களில் சுவாமி விக்கிரகங்களுக்கு அழுக்குத் துணியும்கிழிந்தஆடையும் கட்டிப் புறமெல்லாம் அசுத்தமாக உள்ள நிலைமையைக்காணும்போது இறைவன் அநாதி நிலைமையைக் காணும்போது இ றை வ ன் 'அநாதி' தான் , அவனுக்கு அப்பா, அம்மா இல்லைஅல்லவா?— என்ற எண்ணம் நமக்குத் தோன்றுகிறதன்றோ! கோயில்களும் குளங்களும் (தீர்த்தங்களும்) சுத்தமாக இருக்கவேண்டும். அப்படி இருக்க யாவரும் கண்ணும்கருத்துமாகக் கண்காணிக்க வேண்டும். நம்மைக் காக்கும் கடவுளுக்கு நாம் பணி செய்ய வேண்டும். 'தன் கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே' என்று அப்பரடிகள் உழவாரப் படையுடன் கோயிலைச் சுற்றிச்சுத்தம் செய்தது நமக்கு ஒருமுன்மாதிரிப் பாடமன்றோ! கோயில்களைச்சுத்தமாக வைக்க யாவரும் முனைய வேண்டும்.

இந்தப் புறநிலையில் அசுத்தங்கள் இருந்தாலும், விச்வநாதர் கோயிலிலும் மற்று

முள்ள கோயில்களிலும் சைதன்யம் துலங்கு வதை உணராமலிருக்க முடியாது. மக்களின் உள்ளங்களில் பக்தியுணர்வு தோன்ருமலில்லே. இதுதான் வியப்பான விஷயம். காசியிலுள்ள காலபைரவர், சந்தோஷீ மா முதலான பல கோயில்களில் தரிசனம் செய்துகொண்டோம். ஒரு நாள் காசியில் வெளிக் காட்சிகளேப் பார்த்து வரும்போது நம் தமிழ்நாட்டு மாண வர் இருவர் வழிகாட்டிகளாக வந்தனர். முத லில் பாரதமாதா மந்திரை அணுகினேம். நிறை யச்செலவிட்டு அழகாகக் கட்டப்பட்டது அந்த் மந்திர் (கோயில்). முற்றத்தின் நடுவில் இந் தியாவின்—பாரதத்தின்—மாதிரியுருவம், பாரத தேசத்தின் வரலாற்றை விளக்கும் பெரியதேசப் படங்கள் எல்லாம் நன்ருகப் பராமரித்துக் காக் கப்படாமல் இருந்தது எங்கள்நெஞ்சை நோகச் செய்தது. இவ்வாறு குறைகள் இருக்கக் காரணம் என்ன? அதற்குச் சிறிது தொலேவி லுள்ள புத்தரின் இரண்டு ஆலயங்களும் சுத்த மாக இருந்தன. புத்தபகவானின் சிலேகளும் அழகாகத் தோன்றின. பௌத்தர்களேவிட இந் துக்களுக்குச் சிரத்தை குறைவா?

### ஸாரநாத்

பகவான் புத்தர் முதல்முதலாகத் தம் போத ஃனயைத் துவக்கிய இடம் ஸாரநாத். கயையில் போதி மரத்தடியில் தாம் அடைந்த மெய்ஞ் ஞானத்தை அவர் ஸாரநாத் வந்து ஐந்து பேருக்குப் போதித்தார் என்பது வரலாறு. இந்த ஸாரநாத் காசியிலிருந்து ஏழுமைல்தூரத் தில் உள்ளது. நாங்கள் டாக்ஸிகளில் ஸார நாத்தை அடைந்தோம். அங்குள்ள ஸ்தூபி மிகப்பெரியது. பிரம்மாண்டமான தூண்போல அமைந்துள்ளது. வேலேப்பாடுகள் ஆங்காங்கே இடிந்த நிலேயில் காட்சியளிக்கின்றன. அங்கே ஒருகாலத்தில் பல்கலேக் கழகம் இருந்து செழித் திருக்க வேண்டும். மண்டபங்கள், பண்டக சாலேகள், மேடைகள், தொட்டிகள், வழிபாட்டு இடங்கள் ஆகியவற்றின் சின்னங்கள் ஒருபுறம் காட்சியளிக்கின்றன. ஸாம்ராட் அசோகருக்குப் பின் வந்த அரசர்கள் பௌத்த சமயத்திற்குச் செய்த தொண்டுகளும், கல்வி, கலே ஆகியவற் றின் அபிவிருத்தியில் நாட்டம் கொண்டதன் சின்னங்களும் மறுபுறம் துலங்குகின்றன. அங் கேயே தங்கிஆராய்ச்சிசெய்யவேண்டும் போலி ருந்த எம் ஆசையை அடக்கி ஒதுக்கிவிட்டுப் பொருட்காட்சிச்சாலேக்குப் போனேம்.

பொருட்காட்சிச்சாலேயில் கல்லில் செதுக் கிய அசோக சக்கரமும் — குடைத்தூணும் எங் களேப் பெரிதும் கவர்ந்தன. இங்குள்ள புத்தர் கோயில், பௌத்த நாடுகள் பலவற்றிலிருந்து புத்த பிட்சுக்களேக் கவர்கிறது. ஸாரநாத் புத்த விக்கிரகம் மனத்தில் சாந்தத்தையும் ஆத்மிகப் பேருணர்ச்சியையும் உண்டாக்கு கிறது. இந்த இடத்தில் எங்காவது அமைதி யாக உட்கார்ந்தால் தியானம் நன்கு கைகூடும். அப்படி உட்காரத்தான் எங்களுக்கு நேரம் கிட்டவில்லே; திரும்ப வேண்டியதாயிற்று.

### வாராணசியில் காணத்தக்கவை

காசியில் பல கோயில்களும் மடங்களும்இருக் கின்றன. ஆதிசங்கரர் பரம்பரையில் வந்த சிருங்ககிரி, காஞ்சிபீடங்களேச் சேர்ந்த மடங் களும், தென்னிந்திய சைவ ஆதீனத்தைச் சேர்ந்த மடங்களும் இருக்கின்றன. துர்கா மந் திர், துளசிமந்திர், சங்கட விமோசன ஹநு மான் மந்திர் ஆகியவற்றையும் பார்த்தோம். ஒரு தனி ஊர்போலவும், வித்தியாதேவியின் ஆலயம் போலவும் அமைந்துள்ளது காசி சர்வ கலாசாலே. இந்த இந்துப் பல்கலேக்கழகத்தை ஸ்தாபித்தவர் பெருமை மிக்க பண்டித மதன் மோஹன்மாளவியா அவர்கள். அதன் நடுநாய கமாக விளங்குவது பிர்லா மந்திர். காசியில் ஒரு மாதம் இருந்தாலும் எல்லாவற்றையும் பார்த்துவிட முடியாது. இந்தப் புராதனக்ஷேத் திரம் சிறியவையும் பெரியவையுமான பல கோயில்களேக்கொண்டது.ஆனல் தென்னுட்டுக் கோயில்களேப்போல உயர்ந்த கோபுரங்களேயும் விசாலமான பிராகாரங்களேயும் இங்கே காண முடியாது. மொகலாயர்களின் படையெடுப்பி ஞல் இங்கே பல இந்துக் கோயில்கள் பாழ்பட் டன; உடைக்கப்பட்டன; சூறையாடப்பட்டன. பண்டைய விச்வநாதர் ஆலயம் இருந்தஇடத் தில் இன்று ஒரு மசூதி இருப்பதையும் காண லாம். இன்று நாம் காணும் விச்வநாதர்கோயில் அகல்யாபாய் அம்மையாரால் நிர்மிக்கப்பெற் றது என அறிகிறேம். எந்தவிதமான கோரங் கள் தாண்டவமாடினுலும், நம் தாண்டவ மூர்த்தியான விச்வநாதரின் திவ்யஅருளே வாரா ணசியில் உணருவோம் என்பது உண்மை.

### ஸ்ரீ ராமகிருஷ்ண சேவாச்ரமமும் அத்வைத ஆசிரமமும்

முன்பே கூறியபடி, நாங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்து சுவாமிகளின் விருந்தினராகத்தான் வந்துள்ளோம். சுவாமி விவேகானந்தர் ஆணையிட்டபடி அந்தக் காலத்தில் சிறுதொகையை மூலதனமாகக் கொண்டு உருவானது ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் சேவாச்ரமம்.

இது ஓர் ஆஸ்பத்திரி. சாதுக்களால் சேவை நடக்கிறபடியால் 'சேவாச்ரமம்' என்று பெயர் பெற்றது. பல சந்நியாசிகளும் பிரம்மசாரிகளும் இங்கே தங்கி தம் ஆன்மிகச்சாதனைகளோடு, நோயுற்றவர்களுக்குத் தொண்டுசெய்கிறார்கள். 'ஜீவ சேவையே சிவபூஜை' என்பார் சுவாமி விவேகானந்தர்.

மிகவும் முதுமையடைந்த பழுத்த துறவி சுவாமி பாஸ்வரானந்தஜி அவர்கள். அவரைத் தரிசித்து ஆசி பெற்ற நாங்கள், இந்த மருத்துவ ஆசிரமத்தைச் சுற்றிப்பார்த்தோம். வெகு துப்புரவாகவும் அமைதியாகவும் இருக்கிறது. வயது முதிர்ச்சியாலும் செயலாற்ற இயலாததாலும் நோய்ப்பட்ட துறவிகளுக்கு இங்கே தனி வார்டு ஒன்று இருக்கிறது. அவர்களைமிக்க அன்புடன் கவனித்து இங்கே சேவை செய்கிறார்கள்.

துறவிகளல்லாத தொண்டர்களில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாகஇடங்கள்—வார்டுகள், வசதிகளோடு அமைந்துள்ளன. உயர்ந்த மருத்துவத்தொண்டு இங்கே நடப்பது போற்றத்தக்கதாகும். இப்போது இந்தச்சேவாச்ரமத்தின் தலைவர் சுவாமி சுத்தவ்ருத்தனந்தஜி எங்களைக் கவனித்து ஆன உதவிகளைப்புரிந்தார்கள்.

சேவாச்ரமத்தின் அருகிலேயே உள்ளது ஸ்ரீராமகிருஷ்ண அத்வைத ஆசிரமம். இதன் தலைவர் மதிப்புக்குரிய ஸ்ரீமத் அபூர்வானந்த சுவாமிகள். அன்பும் பரிவும் கொண்டசுவாமிஜி நாங்கள் கேட்பதற்கென்றே ஓர் இரவு பஜனைக்கு ஏற்பாடு செய்திருந்தார். வங்கமொழியில் தூய அன்னையார் ஸ்ரீசாரதா தேவியாரின் நாமாவளி (ஸ்ரீமா நாம ஸங்கீர்த்தனம்) பாடப்பட்டது. அந்தச் சங்கீர்த்தனத்தைக் கேட்டு நாங்கள் உளம் பூரித்துப்போனோம். இந்த ஆசிரமத்தின் திருக்கோயிலில் ஸ்ரீகுருதேவரின் மூர்த்தி சலவைக்கல்லால் ஆனது. இந்த ஆசிரமத்தில் பெரிய பெரிய தபஸ்விகள் வாழ்ந்து, ஆன்மிகச் சாதனைகள் புரிந்ததனால் இங்கே ஒரு தனித் தெய்வீக உணர்வு ஏற்படுகிறது. ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்களான ஸ்ரீசுவாமி துரியானந்தர், ஸ்ரீஅத்புதானந்தர், மற்றும் பல மகான்கள் வாழ்ந்த க்ஷேத்திரம் இந்த அத்வைத ஆசிரமம்.

காசியில் தங்கிய கடைசிநாளன்று வழக்கம் போலக் கங்காஸ்நானம் செய்த பின்பு, தூய அன்னை ஸ்ரீசாரதாதேவியார் வழிபட்ட லிங்க மூர்த்தியை நாங்களும் வழிபட்டோம். ஸ்ரீராமகிருஷ்ணர் காசி வந்தபோது தங்கியிருந்தஇடத்தையும்தரிசித்தோம். அது மாடியில் கங்கையை நோக்கி ஜன்னல்கள் உள்ள அறை. அங்கேயிருந்து தியானித்தபோது நம்மைச் சாந்தியில் ஆழ்த்தும் ஆன்மிக அலைகளை உணரமுடிகிறது. 'க்ஷேத்ரீகுர்வந்தி க்ஷேத்ராணி; தீர்த்தீகுர்வந்தி தீர்த்தநாநினி' என்பது ஆப்த வாக்கியம். பரமஹம்ஸர் தூய அன்னையார் போன்றவர் வந்து இருந்து தவம் செய்த இடமாகையால் இந்த, இடங்கள் எல்லாம் க்ஷேத்திரம்; தீர்த்தமாகியுள்ளன. இத்தகைய இடங்களுக்குப் போய் வருவதனால், நாமும் புனிதமடைகிறோம் என்பது உண்மை.



ஆண்டவனே ஸ்ரீ ராமகிருஷ்ணராகத் தோன்றினன்—இது உண்மையே. பிறருடைய துக்கத்தையும் துன்பத்தையும் போக்கவே ஆண்டவன் அந்த மனித வடிவைப் பெற்றான். தன் நகரில் மாறு வேஷத்துடன் செல்லும் அரசனைப் போல உலவினன். பிறர் அவனை இன்னன் என்று உணர்ந்ததும் அவன் மறைந்து விட்டான்.

— ஸ்ரீ சாரதா தேவியார்

# திருநாம மகிமை

**சுவாமி அத்புதானந்தர்**

**பக்தர்:-** மகராஜ், சாதுக்கள் காம காஞ்சன ஆசைகளைத் துறந்துவிட வேண்டும் என்று போதித்து வருகிறீர்கள். ஆனால் அத்தகைய ஆசைகளை இல்லறத்தில் வாழும் எங்களைப் போன்றவர்களால் எப்படிக் கைவிட முடியும்? அந்த ஆசைகள் எங்களுடைய உள்ளங்களை முற்றுகை போட்டுச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் அவைகளை எதிர்த்துப் போர்புரிவது முடியாத காரியம் அல்லவா? நாங்கள் எப்படிப் போர்புரிவது?



எதைத் துணையாகக் கொண்டு எதிர்த்தாலும் ஆசைகள் எங்களைத் தோற்கடித்துத் துரத்திவிடும். மனதிற்குள்ளே ஓர் இம்மியிடம் கைப்பற்றவும் அவை இடம் கொடுப்பதில்லை. தாங்கள் இறைவனின் திருநாமத்தை ஓதும்படி சொல்கிறீர்கள். ஆனால் ஆசைகளின் இழுப்புகளுக்கு எல்லாம் வசப்பட்ட எங்களிடம், அப்படிச் செய்யும் விருப்பமும் எழாமலே போகிறது.

தாங்கள் எங்களிடம் நிலையானது எது, நிலையில்லாதது எது? என்று ஆராய்ந்து பார்க்கும்படி சொல்கிறீர்கள். இதைச் செய்யும்போதும் உள்ளே இருக்கும் ஆசைகள் தமது வேகத்தோடும் கொந்தளிப்போடும் கிளம்பி, அப்படி ஆராய்ந்து பார்ப்பதையே பாழாக்கி விடுகின்றன. திருநாமம் சொல்லவும் விவேகம் பழகவும் தேவையான ஒரு விருப்பத்தை மனதிலுள்ள ஆசைகளுக்கு மத்தியிலும் உண்டாக்கும் வழியைச் சொல்லி அருள்புரிய வேண்டுகிறேன்.

**சுவாமி அத்புதானந்தர்:-** எப்படி திருநாமம் சொல்வது என்று ஒரேமாதிரியான வேண்டுகோளையே எப்போதும் செய்து வருகிறீர்கள். இறைவனின் திருநாமம், திரும்பத் திரும்ப ஓதுவதன் பயனாக, மனதில் வேரூன்றுகிறது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள்.

ஆசை வெறியால் மனம் மதம் பிடித்து சதா சர்வ காலமும் ஓடிக்கொண்டே இருக்கிறது. ஒரு மாட்டை மூக்கின் வழியாகக் கயிற்றைக் கட்டி இழுத்து வருவதைப் போல, ஆசைகள் உள்ளத்தை நினைத்தபடி செலுத்தி வருகின்றன. அவைகளைவிட அதிக தொந்தரவு தரக் கூடியது வேறு என்ன இருக்கிறது? இதையே அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் கூறினான். பகவானும் உள்ளத்தின் பொல்லாத தன்மையை ஒப்புக்கொண்டார். ஆனால் மேலும் அவர், ''ஏ அர்ஜுனா, உலகப் பொருள்களின் மீது பற்றற்றிருக்கப் பழகு. எப்போதும் இதை பழகு. தொடர்ந்து பழகுவதால் மனம் மெதுவாக அடங்கிவிடும்'' என்றும் சொன்னார்.

மனம் உலகப் பொருள்களை நாடி ஓடும் அளவுக்கு நீங்கள், 'இந்தப் பொருள்கள் நிலையற்றவைகள். இன்றிருந்து நாளை மறைந்து போகக் கூடியவைகள்' என்று புத்தியால் ஆராய்ச்சி செய்துகொண்டே இருங்கள். இந்த நிலையற்ற பொருள்களில் உங்களுடைய வாழ்க்கைக்கு எவ்வளவு அவசியமோ, அவ்வளவு மட்டுமே வைத்துக்கொண்டு திருப்திஅடை

யுங்கள். நீங்கள் எதற்காக அதிகம் பெறவேண்டும்? நிலையில்லாத பொருள்களின் சுமையை நீங்கள் அதிகப்படுத்திக்கொண்டே போனால், அழியாத பொருளாகிய கடவுளுக்கு உங்கள் உள்ளத்தில் இடம் இல்லாமல் போய்விடும். அழியும் பொருள்களைச் சேர்த்துக்கொண்டே போவதால் பரம்பொருளை அடைய முடியாது.

என்றென்றும் அழியாமல் இருக்கும் நித்தியப் பொருள் ஒன்றே ஒன்றுதான். அதுதான் பிரம்மம். பிரம்மத்தைத் தவிர மற்ற எந்தப் பொருளும் பொய்தான் என்பதைத் தெளிவாக உணர்ந்து கொள்ளுங்கள். இந்த முறையில் உங்களுடைய மனதிற்கு நீங்கள் போதித்து வாருங்கள். இவ்விதம் மீண்டும் மீண்டும் நீங்கள் பலமுறை முயற்சி செய்வதன் பயனாக விவேகம் உங்களிடம் உதித்தெழுவதைக் காண்பீர்கள். ஸ்ரீ ராமபிரான் அரண்மனையில் இருந்தபோது, அனுமானிடம் பரிசாக வழங்கிய முத்துமாலையின் கதை உங்களுக்குத் தெரியுமா? அனுமான் மாலையிலிருந்த முத்துக்களை ஒவ்வொன்றாகக் கூர்ந்து பார்த்து ஆராய்ந்துகொண்டே போனார். ஒரு முத்தை எடுத்தார். அதைப் பல்லால் கடித்துப் பிரித்து உள்ளே என்ன இருக்கிறது என்று பார்த்தார். உள்ளே இராம நாமம் எழுதப்படாமல் இருந்ததைக் கண்டார் உடனே அதை அவர் வீசியெறிந்துவிட்டார்.

இவ்விதம் அனுமான் ஒவ்வொரு முத்தாக வீசியெறிந்து கொண்டிருந்ததைக் கண்ட இலட்சுமணனுக்குக் கோபம் வந்தது. கோபத்துடன் அவர், ''என்ன இருந்தாலும் அனுமன் ஒரு குரங்குதானே! முத்துக்களின் மதிப்பைப்பற்றி அவனுக்கு என்ன தெரியும்? இவ்வளவு அழகான முத்துமாலையை அவன் பல்லால் கடித்துப் பாழ்படுத்திவிட்டானே!'' என்று சொன்னார். இலட்சுமணனின் உள்ளம் வருந்திக்கொண்டிருந்ததை ஸ்ரீ ராமபிரான் கவனித்தார். அவர் தமது தம்பியிடம், ''அனுமனிடம் அவன் அப்படிச் செய்ததற்கு என்ன காரணம் என்று அவனையே நீ கேட்கக்கூடாதா?'' என்று கேட்டார்.

இலட்சுமணன் அனுமனிடமே காரணத்தை விசாரித்தார். உடனே அனுமான், ''பிரபு இராமபிரானின் திருநாமம் அந்த முத்துக்களின் உள்ளே இருக்கிறதா என்று ஆராய்ந்து பார்த்துக்கொண்டிருந்தேன்'' என்று பதில் சொன்னார். இவ்விதமே ஒவ்வொருவரும், ஆன்மிக வாழ்க்கைக்கு ஏற்றதா, இல்லையா என்று பொருள்களைப் பாகுபடுத்தி அறிய வேண்டும்.

விவேகத்தை எப்போதும் மங்காமல் ஒளி விட்டுக் கனன்று கொண்டிருக்கும்படி செய்ய வேண்டும். அப்படிச் செய்வதே மிகக் கடுமையான ஒரு தவமாகும். நித்திய அநித்யப் பொருள்களின் வேறுபாடுகளை விசாரித்து உணர்ந்து கொள்ளக்கூடிய வலிமை பெற்றவன், எப்போதும் தனது உள்ளத்தில் திடீரென்று உதிக்கும் தூண்டுதல்களோடு போர் புரிந்துகொண்டே இருப்பான். விவேகம் வைராக்கியம் ஆகிய இரண்டையும் விழித்தெழும்படி செய்யுங்கள். அப்போதுதான் உங்களுடைய ஆசைகளோடு போர்புரியும் திறமையைப் பெறுவீர்கள்.

நித்தியப்பொருள் எது, அநித்தியப்பொருள் எது, என்பதை வேறுபடுத்தி அறியும் விவேகமானது உதிப்பதற்கு முன்னால், காம காஞ்சன உலக ஆசைகளை நீங்கள் எப்படி தடுத்து நிறுத்த முடியும்? முதன் முதலாக, மனம் என்னும் வீட்டிற்குள்ளே, வெளியில் உள்ள இந்திரியங்கள் என்னும் சாளர வாயில்களின் வழியாக உள்ளே புகுகின்ற அழுக்கை நீக்குங்கள். நித்திய அநித்திய விசாரணை செய்து இந்திரியங்களாகிய வாசல்களுக்கு முன்னால், **''உள்ளே வரக் கூடாது''** என்று எழுதியுள்ள உத்திரவைத் தொங்க விடுங்கள். இந்த உத்திரவை மீறி உள்ளே நுழையும் அழுக்குகளை எல்லாம் விவேகம் என்னும் போலீஸ்காரன் கையில் ஒப்படைத்து விடுங்கள். விவேகம் என்னும் போலீஸ்காரனின் துணையைக் கொண்டு மனம் மனதோடு சண்டை போடட்டும். இவ்விதம் செய்வதால் மனம் என்னும் நிலத்தில் உள்ள அழுக்குகள் நீங்கிவிடும். அந்த இடத்தில் இறைவன் எழுந்தருளச் செய்யும் திறமை வரும். இறைவனை அந்த இடத்தில் எழுந்தருளச் செய்யாவிட்டால், நீங்கள் உங்களுடைய ஆசைகளை வெல்லும் திறமையைப் பெறமாட்டீர்கள்.

ஆசையின் விதை மனதில் இருப்பது, சந்தேகத்திற்கு இடமில்லாமல் உங்களுக்குத் தெரியும். அந்த விதைக்கு, உள்ளே இருக்கும் இந்திரியங்களும் வெளியே உள்ள பொருள்களும் தண்ணீர் பாய்ச்சுகின்றன. இவ்விதம் நீர் ஊற்றி வளர்ப்பதின் பயனாக, செழிப்பான

விளைவு அங்கே உண்டாகிறது. அவ்விதம் விளைந்த எல்லாவற்றையும் வெட்டி எறிந்து விடவேண்டும். அதோடு விதைகளையும் அழித்து விடவேண்டும். அதன் பிறகுதான் அந்த இடத்தில் இறைவனின் திருநாமம் என்னும் விதையை விதைக்க வேண்டும். அப்போது தான் திருநாமம் தன்னுடைய நல்ல விளைவைத் தரும். இப்போது ஆசைகளின் விளைச்சல் தான் இருக்கிறது. ஆதலால்தான் குருதேவர், ''காமன் உள்ள இடத்தில் ராமன் இல்லை. ராமன் உள்ள இடத்தில் காமன் இல்லை'' என்று சொல்வது வழக்கம்.

**பக்தர்**:- எனக்குக் கொஞ்சம் சந்தேகம் இருக்கிறது. 'முதலில் இந்திரியங்களை அடக்க வேண்டும். பிறகு இறைவனின் திருநாமத்தை ஜபிக்க வேண்டும்' என்று தாங்கள் போதிக்கிறீர்களா?

**சுவாமி அத்புதானந்தர்**:- அப்படியும் செய்யலாம். ஆனால் பகவானின் திருநாமத்திற்குள்ள அளவில்லாத வலிமையைப் பற்றி என்னவென்று சொல்வது! ஆசை என்னும் விதையை அது முற்றிலும் எரித்து அழித்துவிடக் கூடியது. ''திருநாமம் என்னும் கவசத்தை அணிந்து கொண்டு, காமத்தின் தாக்குதலை எதிர்த்து ஒழித்துவிடு'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுவது வழக்கம்.

**பக்தர்**:- மகராஜ், திருநாமம் எப்படி காமத்தை வெல்ல முடியும்?

**சுவாமி அத்புதானந்தர்**:- காமம் பகவானின் திருநாமத்தை நெருங்கவும் முடியாது. திருநாமத்திற்குள்ள கவர்ச்சியின் மகிமை மிகமிகப் பெரியது. ஆகவே மனம் ஒருமுறை பகவானின் திருநாமத்திற்கு வசப்பட்டதும், காமம் அங்கு தலையெடுப்பதற்கே வாய்ப்பு இல்லாமல் போய் விடும். ஏனென்றால் கடவுளின் திருநாமம் உண்மையானது. மெய்ப்பொருளைத் தியானித்துக் கொண்டிருக்கும் உள்ளத்தில் பொய்ம்மை குடியிருக்க முடியாது.

**பக்தர்**:- இது விழித்துக்கொண்டிருக்கும் நிலையில் சாத்தியமாகலாம். ஆனால் ஒருவன் தூங்கும் போதும் ஆசைகள் அவனது உள்ளத்தைத் தாக்கிக் கொண்டே இருக்கின்றன. அப்படிப் பட்ட தாக்குதல்களிலிருந்து அவன் எப்படி தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்? உறக்கம், கனவு ஆகிய நிலைகளிலும் ஆசைகளிலிருந்து மனம் எப்படிக் காப்பாற்றிக் கொள்ள முடியும்?

**சுவாமி அத்புதானந்தர்**:- இறைவனின் திருநாமம் ஒருவனை அவ்வித தாக்குதல்களிலிருந்தும் காப்பாற்றக்கூடும். நீங்கள் **ஒழுங்காக** பகவானின் திருநாமத்தை ஜெபித்து வந்தால், அதனுடைய சக்தி உறக்கத்திலும் வேலை செய்யும் என்பதை நான் உங்களுக்கு நிச்சயமாகச் சொல்கிறேன்.

திருநாமத்தை ஜபிக்கும் முறையை அறிந்தவன், உறக்க நிலையிலும் விழிப்பு நிலையிலும் ஜபித்துக்கொண்டே இருப்பான். மூச்சு விடுவது போன்ற உடலின் செயல்கள் உறக்கத்திலும் நிகழ்கிறது. அதைப்போலவே திருநாமத்தின் வேலையும் உள்ளத்தில் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. அந்த முயற்சி மனதில் கனவுகள் தோன்றுவதற்கும் இடம் கொடுப்பதில்லை. கனவுகள் தோன்ற ஆரம்பித்தவுடனே, திருநாமம் சாதகனை விழித்தெழச் செய்து, அவனைக் காப்பாற்றி விடுகிறது. ஆகவே பகவானின் திருநாமத்தின் சக்தி சாதகர்களை இரவும் பகலும் காப்பாற்றிக்கொண்டே இருக்கிறது.

இவ்வளவு எளிய உண்மைகளின் உட்பொருளை நீங்கள் தெரிந்துகொள்ள மாட்டீர்கள்! ஆசைகள் உள்ளத்தில் நிலையாகக் குடிபுகுந்துவிட்டன. சில சமயங்களில் அவை மனதின் மேற்பரப்பில் மிதக்கின்றன. சில சமயங்களில் அந்த ஆசைகள் மிக ஆழத்தில் பதிந்து இருப்பதால், அவை தன்னிடம் இருப்பதை ஒருவன் உணராமலே போவதும் உண்டு.

நீங்கள் பகவானை நெருங்க நெருங்க, காமம் முதலிய ஆசைகளின் சிக்கல்கள் உங்களிடம் இருப்பதை அதிகமாக உணர்வீர்கள். உடலும் மனமும் தூய்மையடைய அடைய உள்ளே ஏற்கனவே அமுந்தியிருந்த அழுக்கும், ஆயிரக் கணக்கான பழைய பிறவிகளில் சம்பாதித்துள்ள மறைவான இயல்புகளும் மேலே வரும். அவைகள் வெளியே வந்து பகவானின் திருநாமத்தோடு போராடிக்கொண்டிருக்கும். திருநாம ஜபத்தின் உஷ்ணத்தினால் அவைகள் மனதின் மேல் பரப்பிற்கு வருகின்றன. அதே உஷ்ணம் மனம் என்னும் கோட்டையைவிட்டு வெளியேறும்படியும் ஆசைகளைக் கட்டாயப் படுத்தவும் செய்யும். இந்த நிலையில் அவைகளால் இறைவனின் திருநாமத்தின் சக்தியோடு எப்படி எதிர்த்துப் போர் புரிய முடியும்?



# தியானசித்தன்

**பிரம்மசாரி சுந்தர்**

தியானம் புரியும் கலை எளிதில் கைகூடுவ தில்லை. பெருந்தவத்தின் பயனாக விளைவதுதான் தியானம். தியானம் என்பது என்ன?

மந்தி போன்று அலையும் மனதை ஒருமுகப் படுத்தலும், பின்பு ஒருமுகப்பட்ட மனதைத் தன்னுள் ஒளிரும் தேஜோமயமான ஆத்மாவின் கண் நிறுத்தலுமாகும். வாயு இல்லாத வெளி யிடத்தில் சிறிதும் ஆடாத சுடர் போன்று மனம் தனித்து நிற்கும் நிலையே தியானமாகும். இந்த நிலையில் உடலுணர்வு முற்றும் அற்றுப் போகும்.

சுவாமி விவேகானந்தருக்குத் தியானத்தில் உடலை மறப்பது என்பது சாதாரணச் செயல். கண்மூடிய சில கணங்களிலேயே கண்களுக்கெட் டாத ஓர் அதீதமான உள்ளுலகில் உறைந்து விடுவார்.



தட்சிணேஸ்வரத்தில், பரமஹம்சரின் தேர்ந்த கைகளால் இளைஞன் நரேன் (சுவாமி விவேகானந்தர்) பக்குவப்படுத்தப்பட்டு வந்த காலம். ஒருநாள் நரேனுடன் வங்காள நாடக வித்தகர் கிரீஷ் கோஷ் அவர்கள் தியானம் புரிவதற்கென மரநிழலில் அமர்ந்தார். இரு வரும் இமை மூடி தியானம் செய்ய ஆரம்பித்த வர். சில நிமிடங்களில் சுற்றி வரும் கொசுக் களின் தொல்லையைப் பொறுக்க முடியாமல், இடத்தை விட்டு எழுந்து நின்றார் கிரீஷ். என்ன ஆச்சரியம்! இன்னும் நரேனின் தியானம் கலையவில்லை. அது மட்டுமல்ல; நரேனது உடலில் கறுப்புக் கம்பளியை மூடியது போல கொசுக்கள் அமர்ந்திருந்த பின்னும், உடலைப் பற்றிய உணர்வு உண்டாகவில்லை. நெடுநேரம் கழித்தே நரேனது தியானம் கலைந்தது.

உலகப் புகழ்பெற்ற விவேகானந்தருக்குத் தியானம் புரிவதில் தணியாத ஆர்வம் இருந் தது. நியூயார்க்கில் ஒரு சமயம் சீடர்களுக் கென அவர் 'தியான வகுப்பு' நடத்தி வந்தார். வகுப்பு முடிவதற்கு முன்பு வியப்பெய்தினர் சீடர்கள். தியானம் கற்றுக் கொடுக்கும் வேளை யில், தியானத்தில் ஆழ்ந்துவிட்டார் துறவி வேந்தர்!

ஆங்கு நிலவிய ஆழ்ந்த அமைதியைக் கலைக்க விரும்பாதசீடர்கள்,ஒவ்வொருவராக அறையை விட்டு அகன்றனர். சுவாமிகளின் சுபாவத்தை அறிந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் ''நரேந்திரன் தியானசித்தன்-பிறவியிலிருந்தே தியானத்தில் தேர்ந்தவன்'' என்று கூறியுள்ளாரன்றோ?

சரீரத்தை மறக்கும் சக்தியுள்ளவர்க்கு, அதனை அடக்குவதென்பது சிறு குழந்தைச் செயல். விவேகானந்தரின் விருப்பத்திற்கிணங்கி உடலின் ஐம்பொறிகள் வேலை செய்ததில் வியப் பொன்றுமில்லை. பின்வரும் நிகழ்ச்சி இதைப் பிரதிபலிக்கிறது.

சுவாமிஜி ஆயுர்வேத மருத்துவம் மேற் கொண்ட சமயம். மருத்துவர் கண்டிப்பாக, ''தண்ணீர் குடிக்கக்கூடாது'' என்று கூறியிருந் தார். மருத்துவரின் சொற்படி சுவாமிஜி, தம் மனதில் 'தண்ணீர் அருந்துவதில்லை' என்று திடநிச்சயம் செய்துகொண்டார். அப்போது கடுமையான வெயிற் காலம். தண்ணீர் அருந் தாமலிருப்பது எவ்வளவு துன்பம் தரக்கூடியது! சுவாமிஜியின் மனமோ அதியற்புதமான சக்தி வாய்ந்தது. உடலை இயக்குவது மனந்தானே! மனதின் கட்டளைக்கு உடல் பணிந்தேயாக வேண்டும். எப்போதெல்லாம் சுவாமிஜி தண்ணீர் எடுத்துத் தம் முகத்தைக் கழுவிக் கொள்வாரோ, எப்போதெல்லாம் தண்ணீ ரால் வாயலம்புவாரோ, அப்போதெல்லாம்

அவரது தொண்டையின் உணவுக்குழல் தானு கவே மூடிக்கொள்ளுமாம்! ஒரு துளி நீரும் உள்ளே இறங்காதாம்! என்னே, மன அடக்கத் தின் ஆற்றல்!

தூக்கம் தாமஸ குணத்தின் அடையாளம். பொன்னுன நேரத்தைத் தூக்கத்தில் போக்கினுல், பகவானை எப்போது நினைப்பது? தமது சாதனைத் தினங்களில் தொல்லை தரும் தூக்கத்தை வெல்ல ஓர் உபாயத்தைக் கையாண்டார் சுவாமிஜி. ஒரு நாளில் இருபத்துநான்கு மணி நேரத்தில் அரைமணி நேரமே தூங்குவதென்று முற்றும் துறந்தவர் முடிவு செய்தார். இவ்வாறு இருபத்தைந்து நாட்கள் கழிந்தன, ஒரு நாளுக்கு அரை மணி நேர தூக்கத்தோடு.

இரவு முழுவதும் ஜபம், தியானம், சங்கீதம். பகலில் சாஸ்திர ஆராய்ச்சி, உரையாடுதல், நண்பகலில் அரைமணி நேரத் தூக்கம் இந்தக் கடுமையான சாதனைக்குப் பிறகு, தூக்கம் எப்போதுமே விவேகானந்தரின் விசேஷ விருந்தாளியாக இருந்ததில்லை என்று விளையாட்டாகச் சகோதரி நிவேதிதை சொல்லியிருக்கிருர். நித்திரைத்தேவி சுவாமிஜியிடம் தன் தோல்வியை ஒப்புக்கொண்டாள் போலும்!

சஞ்சலமில்லாத மனம் சுவாமிஜியினுடையது. கண்போல் காத்துவந்த பிரம்மசரியத்தின் பெருஞ்சக்தி, எவ்விஷயத்தில் மனம் வைத்தாலும் அவ்விஷயத்தில் அற்ப காலத்திலேயே புலமை பெறும் ஆற்றலைத் தந்தது.

பேலூர் மடத்தில் ஒரு நாள், சுவாமிஜி தம் சீடர் சரத்பாபுவிற்கு, நூல் நிலையத்திலிருந்து புதிதாக வந்திருந்த 'என்ஸைக்ளோபீடியா' என்ற பெரும் புத்தகங்களைக் கொண்டு வருமாறு கூறினுர். அவை வந்து சேர்ந்தன. பக்கங்களைத் திருப்பியவாறே ஒவ்வொரு புத்தகத்தையும் அவர் மூடி வைத்தது, சரத்பாபுவின் மனத்தில் சந்தேகத்தை எழுப்பியது. ஆனுல், சுவாமிஜியின் முகத்திலோ புன்னகை விளையாடியது. சீடரிடம், ''இவற்றிலிருந்து என்ன கேள்வி வேண்டுமென்ருலும் கேள்!'' என்று வேறு சவால் விட்டார்.

சரத்பாபுவின் கேள்வி மேல் கேள்விக்குச் சரியான விடையளித்தார் சுவாமிஜி. அது மட்டுமல்ல, சிற்சில கேள்விகளுக்குப் பக்கங்களின் எண்ணையும், புத்தகத்திலுள்ள வரிகளையும் அப்படியே திருப்பிக் கூறிச் சரத்பாபுவைத் திக்குமுக்காடச் செய்துவிட்டார் சுவாமிஜி. ஒருமுகப்பட்ட மனத்திற்கு இயலாத காரியம் எதுவுமே இல்லை.

தியானத்தில் தேர்ந்த விவேகானந்தருக்கு, பிறர் மனத்தில் எழும் எண்ணங்களை அறியும் ஆற்றல் இருந்தது. சுவாமிஜி பரிவ்ராஜகராகச் சென்னை வந்து சேர்ந்தபொழுது, இளைஞர் பலர், அவரது அறிவாற்றலினுலும் சொற்பொழிவுத் திறத்தினுலும் கவர்ந்து இழுக்கப் பட்டனர்.

குறிப்பாக 'வினு-விடை' நேரங்களில் எதிரிலிருப்போரின் எண்ணங்களை விவேகானந்தர் வெள்ளிடைமலையென அறிவார். விஷயத்தை விளக்கும்போதே ஆழ்ந்து செவிமடுப்போரது சிந்தனைகளைக் கண்டுகொண்டுவிடுவார். வினு எழுப்பப்படும் முன்பே வினுவும் விடையும் கூறி வியப்பில் ஆழ்த்திவிடுவார். ''கேள்வி தொடுக்கும் முன்பே, எவ்விதம் தாங்கள் அறிந்தீர்கள்?'' என்று ஆச்சரியப்பட்ட ஓர் இளைஞருக்குச் சிரித்துக்கொண்டே. ''சன்னியாசி மனதிற்கு மருத்துவன்! முகம் பார்த்து மனம் அறிபவன்'' என்று சுவாமிஜி பதிலிறுத்தார்.

சுவாமிஜியின் கடைசி இரண்டு வருடங்களில் பெரும்பகுதி செயலாற்றுதலைவிடத் தியானத்திலேயே கழிந்தது. அலையிலாத பெருங்கடலின் ஆழ்ந்த அமைதியைப் போல, சுவாமிஜியின் மனம் சிந்தனையழிந்து, சொற்கடந்த சீரிய அமைதியைப் பெற்றது. இரண்டாவது முறை மேலை நாட்டு விஜயம் செய்தபொழுது சுவாமிஜியின் மனம் எவ்வாறு இருந்தது என்பதை, அங்கிருந்து அவர் வரைந்த அற்புதக் கடிதங்கள் அறிவிக்கின்றன. குறிப்பாக குமாரி மெள்ளாயிடு அம்மையாருக்கு எழுதிய கடிதம், அவரது மாறிய மனநிலையை நன்கு விளக்குகிறது.

பேலூர் மடத்திற்குத் திரும்பிய சுவாமிஜி, தியானம் புரிவதில் தீவிர ஈடுபாடு செலுத்தினுர். இது சகோதரச் சீடர்களுக்கும் மற்றவர்களுக்கும் கவலையைப் பிறப்பித்தது. எங்கே தமது உடலை உதறித் தள்ளிவிடுவரோ என்ற பயம்தான். ஸ்ரீ ராமகிருஷ்ணர், விவேகானந்தரைப்பற்றி விளம்பியிருந்தது எல்லோருக்கும் நினைவில் இருந்தது. ''தன் சுய இயல்பை-சிவத் தன்மையை என்றைய தினம் நரேந்திரன் உணருவானே, அன்றைய தினம் அவன் உடலை நீக்கும் தருணம் வந்துவிடும்'' என்பதுதான் அது.

அந்த தவிர்க்க முடியாத தருணத்தைத் தள்ளிப் போடச் சீடர்களும் ஏனையோரும் முழு மனதுடன் முயன்றனர். ஆனால் அவரது மனதை மாற்ற எவரால் இயலும்? ஒரு சமயம் விளையாட்டாகப் பேசிக் கொண்டிருக்கையில், ஒருவர், ''சுவாமிஜி! தாங்கள் யாரென்பது தற்போது தங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார்.

மெதுவாக, ஆனால் மிகவும் அழுத்தமாக, ''ஆம், தெரியும், நான் யாரென்பது!'' என்று சுவாமிஜி விடையிறுத்ததும் அங்கே நிலவிய மயான அமைதியைக் கலைக்க எவருக்கும் துணிவு இருக்கவில்லை. ஆனால் சில நாட்களுக்குப் பிறகு சுவாமிஜி தமது உடலைத் துறப்பதற்குத் துணிந்துவிட்டது யாருக்குத் தெரியும்?

1902-ஆம் ஆண்டு ஜூலை நான்காம் நாள். சுவாமிஜி விடிகாலையில் வழக்கப்படி தியானம் செய்தார். பகலில் மடத்தைச் சேர்ந்தவர்களுக்கு சமஸ்கிருத வகுப்பு நடத்தினார். மாலையில் தமது அறையில் கங்கையை நோக்கித் தியானத்தில் அமர்ந்தவர் பின்னர் எழுந்திருக்கவே யில்லை. என்றும் மாறி வரும் இவ்வுலக வாழ்வை விடுத்து என்றுமே மாறாத இறை வாழ்வை எய்தினார் சுவாமி விவேகானந்தர். அற்புதமான தியான வாழ்வு!





## ஸ்ரீ ராமகிருஷ்ணர்!

'தமிழமுதன்'

இராம கிருஷ்ண பரம ஹம்ஸர்
ஈடில் லாதவர்!—உலகில்
ஈடில் லாதவர்!

பராப ரத்தைப் போற்றும் வாழ்வைப்
பணியாய்க் கொண்டவர்!—தம்
பணியாய்க் கொண்டவர்!

சராச ரத்தை இயக்க வல்ல
சக்தி வாய்ந்தவர்!—பெருஞ்
சக்தி வாய்ந்தவர்!

உராயும் போது பற்றும் தீபோல்
ஒளியாய் ஆனவர்!—அருள்
ஒளியாய் ஆனவர்!

இறைவன் மேலே அன்பு செலுத்தி
இருளை நீக்கினார்!—நெஞ்சின்
இருளை நீக்கினார்!

கறையில் லாத வாழ்க்கை ஒன்றே
கடமை ஆக்கினார்!—அருங்
கடமை ஆக்கினார்!

நிறைவாய் விவேகா னந்தர் தம்மை
நெறிப்ப டுத்தினார்!—சமய
நெறிப்ப டுத்தினார்!

பொறையாய் இறையைப் போற்றி செய்து
புகழும் எய்தினார்!—உண்மைப்
புகழும் எய்தினார்!



# பரமார்த்தப் பிரசங்கம்

**சுவாமி விரஜானந்தர்**

248. சாதகனுக்குக் கிருபையை அருளும் பொருட்டும் சாதகனுடைய பகவதாராதனையை எளிதாக்கும் பொருட்டும் பகவான் உருவம் தரிக்கிறார். குணங்களைக் கடந்ததும் நினைத்தற்கு அரியதுமான சொரூபத்திலோ அல்லது எல்லா ஈசுவர குணங்களின் தொகுப்பான தன்மையிலோ ஆண்டவனைச் சிந்திப்பது முடியாது. அது பிள்ளையார்பிடிக்கப்போய் குரங்கு ஆன கதையாக முடியும். எதுவரை நாம் மானிட வர்க்கத்தைச் சார்ந்தவர்களாக உள்ளோமோ எதுவரையில் தேகபுத்தியும் துவைதப்போக்கும் நம்மிடம் உள்ளனவோ அதுவரை இறைவனை ஒரு வரையற்ற திவ்ய குணங்கள் கொண்ட லட்சிய புருஷராகக்கொள்ளுவதைத் தவிர வேறு உபாயம் நமக்கு இல்லை.

* * *

249. உருவமற்ற, நிராகாரமான முறையில் இறைவனை நாம் சிந்திக்க முயன்றோமானால், நாம் மிக அதிகமாகக் கற்பனை செய்தோமாயினும் பரந்த ஆகாயத்தையோ எல்லையற்ற கடலையோதான் எண்ண முடியும். முதற்படியிலேயே நாம் இறைவனை நிராகார சொரூபத்தில் தியானிக்கப் பிரயத்தனம் செய்தால் சூனியத்தையே தியானிக்க முடியும். அதற்கு மேலாக ஒன்றும் செய்து விடமுடியாது. அதன் மீது வேறு எதையும் ஏற்றுவிக்க முடியாது—ஆரோபம் செய்ய முடியாது. அதுவெல்லாம் இருட்டில் கல்லை எறிவதற்கே ஒப்பாகும். நிராகாரமான பிதா அல்லது நிராகாரமான மாதாவின்மீது தியானம் செய்வது சாரமற்ற கற்பனையின் கஷ்டப்பிரயத்தனமேயாகும். நிராகாரப் பொருளின் மீது தியானம் செய்வது என்பது வெறும் அர்த்தமற்ற சொல்லின் அர்த்தமற்ற பயனற்ற பிரயோகமேயாகும். நிராகாரத் தியான உபாசனையின் வாயிலாக நாம் அத்யாத்மச் சிறப்புறும் பெரு வழியிலே வெகு தூரம் முன்னேற முடியாது. ஏனென்றால் அந்த முயற்சி ரஸமற்றது, சுவையற்றது, பிடித்துக் கொள்ளுவதற்கான ஆதாரம் ஏதும் இல்லாதது. உருவமெல்லாம் கடந்த நிராகாரப் பிரமத்தைத் தியானிப்பதற்கான அதிகாரி யாரென்றால், தேக ஞானம் அற்றுவிட்ட, முக்தராகிவிட்ட, எல்லா உயிர்களிடத்தும் இறையையே காணவல்ல, பரமஹம்ஸரான ஒருவரால்தான் முடியும்.

* * *

250. பகவான் ஸ்ரீகிருஷ்ணர் கீதையிலே இவ்வாறு கூறியுள்ளார். ''சாதுக்களைக் காப்பதற்கும் தீயோர்களை அழிப்பதற்கும் தேய்ந்து கொண்டிருக்கும் தர்மத்தை மறுபடி ஊன்றச் செய்வதற்கும் நான் ஒவ்வொரு யுகத்திலும் நரரூபம் தரித்து வருகிறேன்''. ஆனால் பக்தன் உரைப்பது யாதெனில் இதுவெல்லாம்வெறும் வெளிப்புறமான நிகழ்ச்சி, மேல்வாரியான சம்பவம், நாம் இன்னமும் முன்னே, இன்னமும் ஆழ்ந்து செல்ல வேண்டும் என்பதாம். இது மட்டுமே எல்லாம் ஆகிவிடாது. இதற்குப்பின்னும் விரிந்த பொருள் இருக்கவேண்டும் என்று பக்தன் கொள்ளுகிறான். கடவுளோ சர்வசக்தியுடையவர். அவர் அவதாரம் எடுத்து, உடல் தாங்கி, சொல்லொணாத் துயரையெல்லாம் சகித்துக்கொள்ளாமலேயே, இச்சை மாத்திரத்தாலேயே இதையெல்லாம் செய்து நிறைவேற்றியிருக்கலாம். ஆதலால் பகவத் அவதாரத்தை நிரூபணம் செய்வதற்கு இதையே பெரும் பிரமாணமாகக் காட்டுவது சரியாகாது. அறத்தை வெறுத்து மறத்தைப் பற்றியிருந்த கம்ஸனையும் சிசுபாலனையும்கொன்றதாலேயே கிருஷ்ணரை ஒரு அவதார புருஷர் என்று கூறிவிட முடியாது. அத்தகைய கொடும் மன்னரைக் கொன்று, மக்களைத் தீய ஆட்சியினின்றும் விடுவித்த இத்தகைய பலப்பல நிகழ்ச்சிகள் உலக சரித்திரத்தில் நிறைந்து கிடக்கின்றன. மேலும் பல மகான்கள் அல்லது மகாபுருஷர்களுடைய வாழ்க்கையிலே, அவர்கள் யோகசித்தர்களாக இருந்த காரணத்தால், பல அற்புத நிகழ்ச்சிகள் காணப்படுகின்றன. அவர்கள் அற்புதமான காரியங்களைச் செய்யவல்லவர்கள். அவர்களால் முடியாத காரியம் ஒன்றும் இல்லை. ஆனால், ஸ்ரீகிருஷ்ணருடைய அவதாரத் தன்மையை,

அவர் மதுராபுரியின் நாதராக இருந்தும், துவாரகாநாதராக இருந்தும் குருக்ஷேத்திரத்தில் பாண்டவர்களுக்குச் சகாயம் செய்தும் வழிகாட்டியும் செய்த காரியங்கள்கூட வெளிக்காட்டுவனவாகக் கொள்ளக்கூடாது. பாண்டவர்கள் தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காகக் கிருஷ்ணர் சிலசமயங்களில் அறத்திற்கு ஒவ்வாத முறைகளைக் கையாள வேண்டியும் இருந்தது. அவருடைய ஆச்சரியமான செயல்களும் அற்புத சாதனைகளும் நமக்கு வியப்பைத் தருவதும் அவரிடம் கௌரவபுத்தியை உண்டுபண்ணுவதும் வாஸ்தவம் தான். அவருடைய பலதரப்பட்ட அதியற்புதமான அறிவாற்றலுக்கு அவை சான்றுகளாக இருப்பதும் உண்மையே. ஆனாலும்கூட அவையாவும் தாற்காலிகமான, குறிப்பிட்ட சமயத்திற்கே பொருத்தமான விஷயங்களேயாகும். மனித இனத்தின் வாழ்க்கைப் போக்கின்மீது அவை நிரந்தரமான வகையிலோ நீண்ட காலப்பிரயோசனமுண்டுபண்ணக்கூடிய முறையிலோ பயன் எதையும் பொறிக்கவில்லை.

* * *



**கண்ணன் தமிழ் : 8**

# மஞ்சனமாட நீ வாராய்!

**ர. வேங்கடரத்தினம்**

எந்தக் குழந்தையுமே நீராட இலேசில் வந்து விடாது. நீராட வந்த பின், நிறுத்தாமல் நீரிலேயே ஆடிக்கொண்டு இருத்தல் வேறு விஷயம். முதலில், கூப்பிட்டவுடன் இதோ என்று நீராடக் குழந்தை ஏதும் வராதன்றோ? குழந்தைக் கண்ணன் மட்டும் இந்தக் குழவியர் தர்மத்திற்கு விலக்காக இருப்பானோ? கூப்பிடக் கூப்பிட, வாராது ஓடுவான். அன்னை அழைத்துக் கொண்டே இருப்பாள்!

கிருஷ்ணன் மாட்டுக்கொட்டிலிலேயே பொழுதைப் போக்குபவன் போலும். ஆம், ஆசையோடு மாடு கன்றுகளைப் பார்த்துப் பராமரிக்கும் கோபாலன் அல்லவா? எனவே, தொழுவத்துத் தூசி, புழுதி அனைத்தும் கண்ணனின் திருமேனி மீதுதான்! அங்கே போய்ப் போய், இருக்கிற புழுதி அவ்வளவையும் தன் மேல் அப்பிக்கொண்டு நிற்பவன் இவன்.

ஆயினும், பார்க்கப் பரமானந்தமாகத்தான் உள்ளது. உள்ளூர எனக்கு உன்னை இவ்வண்ணம் பார்ப்பதில் எவ்வளவோ உவகை உண்டு. எனினும் ஊரார் ஏசுவார்களே என்னை. குழந்தையை நீராட்டிச் சீராக நான் கவனிப்பதில்லை எனப் பேசுவார்களே. இவ்வாறு அன்னை அழைப்பாள்.

பூணித் தொழுவினில் புக்குப்
புழுதி யளைந்தபொன் மேனி
காணப் பெரிதும் உகப்பன்
ஆகிலும் கண்டார் பழிப்பர்
நாணெத் தனையும் இலாதாய்
நப்பின்னை காணில் சிரிக்கும்
மாணிக்கமே என் மணியே!
மஞ்சனம் ஆட நீ வாராய்.

திருமஞ்சனத்திற்கு இவ்வாறு அழைப்புவிடுத்தாகிறது. பொன்மேனி நெடுகப் புழுதி. பார்க்க அழகாய்த்தான் உள்ளது. எனினும் "நந்தகோபன் வீட்டுப்பிள்ளை இப்படி அழுக்காக, கவனிப்பார் அற்றவன் போல இருக்கிறனே" எனக் காண்பார் தூற்றுவாரே!

உனக்குத்தான் வெட்கமாக இல்லையா? உன்னோடு ஒத்த நங்கை நப்பின்னை பார்த்துச் சிரிப்பாள். வந்துவிடு! ஒழுங்காய் நீராடிச் செல்! என் மணியே! மாணிக்கமே!

இவ்வாறு அருமையாக அன்போடு அழைக்கும் அன்னை இடையில் கண்ணன் பண்ணும் தீம்புகளையும் நினைவுகூர்வாள். குடத்தில் எண்ணெய் வைத்திருந்தால், அதை ஒன்றும் அறியாதவன் எனப் புரட்டிக் குப்புறக் கவிழ்ப்பான். கூடம் நெடுக எண்ணெய் மயமாக்கி

விட்டுப் போவான். சின்னஞ்சிறு பிள்ளை உறங்கிக்கொண்டிருக்கையில், குறும்புக்காரக் கிருஷ்ணன் அருகிற் சென்று நல்லவன் போலக் கிள்ளிக் கிளப்பி விட்டுவிடுவான். இவ்வளவும், தான் செய்துவிட்டு ஏதுமே அறியாதவன் போலக் கண்களைக் கசக்கிக்கொண்டு, உறங்கிக் கொண்டிருந்தவன் குழந்தையின் அழுகை யொலியினுல் எழுப்பப்பட்டவன் என நிற்பான்.

எண்ணெய்க் குடத்தை யுருட்டி
இளம்பிள்ளை கிள்ளி யெழுப்பி
கண்ணைப் புரட்டி விழித்துக்
கழகண்டு செய்யும் பிரானே!
உண்ணக் கனிகள் தருவன்
ஒலிகடல் ஓத நீர் போலே
வண்ண மழகிய நம்பீ!
மஞ்சனம் ஆடநீ வாராய்!

வம்பு செய்யும் பிரானைப் பெற்றவள், 'நீராட வந்தால் தின்னப் பழங்கள் தருவேன்' என்று சொல்லிப் பார்ப்பாள். பேரிரைச்சல் போடும் அலைகடல்நீரின் நீலவண்ணம் தாங்கிய நம்பீ, மஞ்சனம் ஆடவாராய்! தூங்கும் குழந் தையைக் கிள்ளிக் கிளப்பியவன், மலங்க மலங்க விழித்தவாறு தன் கண்களைக் கசக்கிக்கொண்டு நிற்றல் பெரியாழ்வார் அநுபவித்துப் பாடும் கவினுறு காட்சியாகும்.

வேறு எதற்கும் அல்லவாயினும், பிறந்த நாள் ஆதலின் நீராடவா என்று அழைத்தும் பார்ப்பாள் அவள்!

இன்னெரு பாட்டில் அன்னை: அருமைச்செல் வனை,

........நீபிறந்த திருவோணம்
இன்று நீ நீராட வேண்டும்
எம்பிரான் ஓடாதே வாராய்

எனக் காரணம் கூறிக் குளிக்கக் கூப்பிடுவாள். பிறந்த திருநட்சத்திரம் என்பதற்காகவேனும் மங்கல நீராட வேண்டாமா?

கண்ணன் குளிப்பதற்காக விசேஷமான மங்கல நீர் கலந்து வைத்துள்ளது. நறுமணம் மிகுந்த பொருள்கள் பலவும் சேர்ந்த நற் கலவை வைத்திருக்கிறது என்று கண்ணனை நீராட அழைப்பாள்.

மஞ்சளும் செங்கழு நீரின்
வாசிகையும் நாறு சாந்தும்
அஞ்சனமும் கொண்டு வைத்தேன்
அழகனே! நீராட வாராய்.

குளித்தபின்னர் இட்டுக்கொள்வதற்காகச் சாந்தும் மையும் போலும். எல்லாம் காத்து நிற்கின்றன. வந்து நீராடிவிட்டுச் செல்வாயாக என்று அன்னை அழைப்பாள். திருமஞ்சனநீரும், சாந்தும் அஞ்சனமும் வீண்போகாவண்ணம் நீராடிவிட்டுச் செல்வதற்கு, இவ்வளவும் கெஞ்சியாகிறது!



**அற்புதத் திருவந்தாதி—36**

# வளராத மதி

**கி. வா. ஜகந்நாதன்**

இறைவனுடைய திருமுடியில் உள்ள பிறை வளர்வதும் இல்லை; தேய்வதும் இல்லை. தட்ச னுடைய சாபத்தால் தேய்வுற்ற மதியை இறை வன் தன் திருமுடியில் அணிந்து காப்பாற்றி ஞன். இறைவனைச்சார்ந்த யாவரும் எந்த மாற்றமும் இல்லாமல் ஒரே நிலையில் இருப்பார் கள் என்ற உண்மையை மதியின் நிலை தெளிவிக் கிறது.

சந்திரன் பிறையாக, தேய்ந்த மதியாக, இறைவன் திருமுடியில் இருப்பதற்குக் காரைக் காலம்மையார் ஒரு காரணம் கற்பிக்கிறுர். குழந்தையோடு நெருங்கி வேடிக்கையாகப் பேசும் தாயைப்போல இருப்பவர் அம்மையார். இறைவனே, ''அம்மையே!'' என்று அழைத்த அம்மையார் அவர். ஆகவே தம்முடைய கற் பனையான எண்ணங்களையெல்லாம் இறைவனை பார்த்தே சொல்கிறுர்.

'சுவாமி, உம்முடைய திருமுடியின் மேல் உள்ள மதி தேய்ந்து வருந்துகிறது; அதைப் பார்த்தால் பாவமாக இருக்கிறது. நீர் அந்த முடியின் மேல் பாம்பை அணிந்திருக்கிறீர். எல் லோரும் அஞ்சும் பாம்பை நீர் அணிகலனுகக்

கொண்டிருக்கிறீர். தேவர்களெல்லாம் அஞ்சி நடுங்கிய ஆலகால விஷத்தையே கழுத்திலே மணிபோல அணிந்தவராயிற்றே, நீர்! இந்தப் பாம்பைக் கண்டு அஞ்சாததில் என்ன வியப்பு இருக்கிறது!' இப்படியெல்லாம் எண்ணி இறைவனை விளிக்கிறார்.

மறுவுடைய கண்டத்தீர்!

'நாகத்தைக் கண்டு மக்கள் யாவரும் நடுங்குவது கிடக்கட்டும். சந்திரனுக்கும் பாம்புக்கும் பகை. கிரகண காலங்களில் பாம்பு விழுங்கி உமிழும் இன்னலுக்கு உட்படுவது திங்கள். என்றோ ஒருநாள் அந்த விபத்து நிகழ்ந்தாலும், அதை நினைந்து நாகப்பாம்பு என்றாலே அச்சம் கொள்ளும் இயல்புடையது அந்தத் திங்கள். ''அருண்டவனுக்கு இருண்டதெல்லாம் பேய்'' தானே?

'இந்தச் சந்திரன் உம்முடைய நீண்ட சடைமேல் உள்ள நாகத்தைக்கண்டு 'அஞ்சி நடுங்குகிறது, எந்தச்சமயத்தில் அது தன்னை விழுங்கி விடுமோ என்று மறுகுகிறது. அதனால் அது தேய்ந்திருக்கிறது, ஐயோ பாவம்!'

வார்சடைமேல் நாகம்
தெறும் என்று தேய்ந்து உழலும்;ஆவா!

'அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமல் நோஞ்சானாகத் தேய்ந்திருக்கிறது இந்த மதி. உள்ளத்துக்குள்ளே அது கலங்கி உழலுகிறது. பாம்பையும் திங்களையும் ஒருங்கே அணிந்ததால் வந்த வினை இது. அந்த நாகம் என்ன செய்து விடுமோ என்று அஞ்சி அஞ்சிச் சாகும்படி வைத்திருக்கிறீரே! நியாயமா? அந்தப் பாம்பு ஏதோ இதுவரையில் சும்மா இருக்கிறது. வானத்தில் உள்ள சந்திரனைப் போல வளரக் கூடாதோ என்று நினைத்துப் பார்க்கிறேன். அது எப்படி வளரும்? அந்தப் பாம்பு வானம் அஞ்சும்படி மேலே தாவி ஓடினால் சந்திரனைஎட்டிப் பிடித்து விடுமே! நீ உச்சியில் அணிந்த பிறை இப்போது நாகத்தோடு தொடர்பு இல்லாமல் இருக்கிறது. ஆனால் அந்தப் பாம்பு எட்டித் தாவ ஆரம்பித்தால் என்ன செய்வது? அப்படி அது தாவுமோ என்று பயந்தபடியே இருக்கிறது அந்த மதி. அது எப்படி வளரும்? நாகப்பாம்பு முழுமதியை விழுங்கிவிடும். மதி வளர்ந்து பூர்ண சந்திரன் ஆகிவிட்டால் அந்தப் பாம்பு ஒரே தாவாகத் தாவி அதை விழுங்கினாலும் விழுங்கும். அது அப்படி முடியின்மேலே தாவும்போது வானில் உள்ளவர்களே அஞ்சுவார்களே! திங்கள் அஞ்சாமல் இருக்குமா! அந்த அச்சத்தால்தான் அது வளராமல் இருக்கிறது. தான் வளர்ந்து முழுமதியாகிவிட்டால் நாகப்பாம்புக்கு இரையாக நேரும் என்ற அச்சம் காரணமாகவே அது வளராமல் இருக்கிறது. நாகத்தை அருகிலே வைத்திருக்கும்போது, சந்திரன் வளருமா?'

......உறுவான்
தரை மீது ஓடுமேல், தான் அதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி?

அது பிள்ளைமதியாக, பிறையாகவே தேய்ந்திருப்பதற்குக் காரணம் இதுதான் என்று காரைக்கால் அம்மையார், கற்பனையாக ஒன்றைச் சொல்கிறார்.

மறுவுடைய கண்டத்தீர்!
வார்சடைமேல் நாகம்
தெறும் என்று தேய்ந்து உழலும்;
ஆவா! — உறுவான்
தளர மீது ஓடுமேல்
தான் அதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி?

[ஆலகால நஞ்சமாகிய மறுவை அணிந்த திருக்கழுத்தை உடைய பெருமானே! இளமையையுடைய பிறை, உம்முடைய நீண்ட சடையின்மேல் அணிந்துள்ள நாகப்பாம்பு தன்னை வருத்தும் என்று அஞ்சித்தேய்ந்து மனம் மறுகும். ஐயோ பாவம்! (தான் வளர்ந்து முழுத் திங்களாகிவிடும்போது) மேலே உள்ள வானத்திலுள்ளோர் தளரும்படியாக அந்தப் பாம்பு மேலே தன்னைக் கவ்வ ஓடுமானால், அந்த மதி அஞ்சி நையுமேயன்றி வளருமா?

மறு—கறுப்பு, தெறும்—துன்புறுத்தும், உழலும்—மனம் சுழலும்; கலங்கும், ஆவா:இரக்கக் குறிப்பு, வான்—வானில் உள்ளார். ஓடுமேல் என்றது, வளர்ந்தபோது அதைக் கவ்வ ஓடும் என்ற கருத்தை உட்கொண்டது, தான் என்றது மதியை. பிள்ளை மதி — பாலசந்திரன்; இளம்பிறை.]

பிறை அச்சத்தினாலே வளராமல் தேய்ந்திருக்கிறது என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியில் உள்ள 36-ஆம் திருப்பாட்டு.

# மதிப்புரை

**பஞ்சாக்னி**

ஆசிரியர்: அ. பா. சுப்ரமண்யம் (அபிநவம்)
30, பெருமாள் கோவில் தெரு
கோபி செட்டி பாளையம்
(வழி) ஈரோடு-638 452.

பஞ்சாக்னி என்ற நூல் மகாபாரதக் கதையைத் தழுவிய புதிய கற்பனை. வாழ்வும் போரும், போரும் குழப்பமும் என்ற இருபகுதிகள் கொண்டது. வனத்தில் வாழும்போது பாண்டவருள் தருமன் நீங்கலாக மற்றவர் போரிட்டு ஆட்சியைக் கைப்பற்ற வேண்டுமென் கின்றனர். தருமன் இக்கூற்றை எதிர்க்கின்றான். பதின்மூன்றாண்டுகள் முடிகின்றன. போர் முடிந்து அரசைப் பெறுகின்றனர். அப்போது ஆட்சியை விரும்பாமல் வனத்திற்குச் சென்று துறவுபூண்டு தவஞ்செய்ய விரும்புகின்றான் தருமன்.

பொதுவாக இந்நூலுள் தெரிவித்துள்ள செய்திகளுக்கும் மகாபாரதச் செய்திகளுக்கும் எவ்வித ஒற்றுமையுமில்லை. எல்லாம் வெறும் கற்பனையே. புதிய உவமைகளும் கற்பனைகளும் சிறப்பாக இருக்கின்றன. செய்யுட்கள் எவ்வித இலக்கணத்திற்கும் பொருந்தவில்லை. ஓசை நயம், தொடை நயம் இல்லாது கடினமான சொற்களால் வலிந்து எழுதப்பட்டவையாயிருக்கின்றன.

—ப. இராமன்

'Pathway to God Trod by Saint Ramalingar'; G. Vanmikanathan; Pages xxxii+784; Price: Rs. 45.00. Publishers: Bharatiya Vidya Bhavan, Bombay 400 007.

''மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் சொல்வதிலோர் மகிமை இல்லை; திறமான புலமையெனில் வெளிநாட்டோர் அதை வணக்கஞ் செய்தல் வேண்டும்'' என்பதுதான், பாரதியைப் போலவே, நூலாசிரியர் ஜி. வன்மீகநாதன் அவர்களுக்கும் குறிக்கோள் எனத் தோன்றுகிறது. இவரது குறிக்கோளைச் சாத்தியமாக்க இந்த நூல் பெருமளவு சாதனமாக விளங்குகிறது.

ஸ்ரீ ராமலிங்க ஸ்வாமிகளின் வாழ்க்கை வரலாற்றை, அவரது திருவருட்பாக்களிலிருந்து எடுத்த அகச்சான்றுகள் வாயிலாகவே உருவாக்கியிருக்கிறார் நூலாசிரியர். தமிழறியாதவர்களுக்கு, குறிப்பாக வெளிநாட்டவர்களுக்கு, ஸ்ரீ ராமலிங்க ஸ்வாமிகளின் மேன்மையை அறிமுகப்படுத்துவதற்காக ஆக்கப்பட்ட இந்நூலில் 'திருவருட்பா'வின் ஏராளமான செய்யுள்களுக்கு ஆங்கில வடிவம் கொடுக்கப்பட்டிருக்கிறது; அது மட்டுமல்ல, ஸ்வாமிகளுடைய ஆன்மிக வளர்ச்சியின் பல்வேறு படிகளை, மேலைநாட்டவர்கள் நன்கறிந்த, செயின்ட் ஜான் என்ற பெரியார் ஒருவர் வகுத்து வைத்த பிரகாரமே வகுத்துச் சொல்லியிருப்பதும் இந்த ஆங்கில நூலின் சிறப்பு வாய்ந்த உத்தியாகும். அருட்பாவில் காணப்படும் பல்வேறு ஆன்மிக அநுபவங்கள் பற்றிய விளக்கங்களை, ஐரோப்பிய மேதைகள் பலரது வாக்குகளை மேற்கோள் காட்டி வழங்கியிருப்பதும் அர்த்தமுள்ள மற்றோர் உபாயமே.

ஐந்து மாதக் குழந்தையாக ஸ்வாமிகள் தில்லையில் நடராஜ தரிசனம் செய்ததிலிருந்து, அவர் அருட்பெருஞ்சோதியில் ஐக்கியமானது வரையில் வாழ்க்கைப்பாதையில் ஸ்வாமிகள் நடந்த விதம் இந்த நூலில் பக்தி சிரத்தையோடு சித்திரிக்கப்பட்டிருக்கிறது.

மகான்களின், அருளாளர்களின் தொடர் பறாத வரிசைதான் பாரதம் உலகுக்கு வழங்கி வரும் கொடை. அத்தகையோருள் ஒருவரான ஸ்ரீ ராமலிங்க ஸ்வாமிகளின் வாழ்க்கையையும் அருள்வாக்கையும், ஆங்கிலமறிந்தோருக்கு உணர்த்த இந்நூல் அருமையான முறையில் கைகொடுக்கும்.

—எஸ். எஸ். எம்.



# செய்திகள்

## ஸ்ரீ விவேகானந்த ஜயந்தி விழா

சுவாமி விவேகானந்தரின் 115-ஆவது ஜன்ம திதி விழா 1977 ஜனவரி 12 புதன்கிழமை யன்று மயிலை ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. காலையில் பஜனை, வேத உபநிஷத் கீதா பாராயணம், விசேஷ பூஜை, ஹோமம் முதலிய நிகழ்ச்சிகள் பக்தி சிரத்தையுடன் நடந்தேறின.

சென்னைக் கடற்கரையில் நிறுவப்பட்டுள்ள சுவாமி விவேகானந்தரின் திருவுருவச் சிலைக்கு மாலைகள் அணிவித்து மரியாதைகள் செய்தனர். வழக்கம்போல் மாணவர்களும் பொது மக்களும் இந்நிகழ்ச்சியில் உற்சாகத்துடன் கலந்து கொண்டார்கள்.

மாலை ஆரதிக்குப் பிறகு சுவாமி சித்கனனந்தர், விவேகானந்தரின் வாழ்க்கையிலிருந்து சில பகுதிகளை மடத்தில் குழுமியிருந்த அன்பர்களுக்குப் படித்துக்காட்டினர். சுவாமி நித்திய போதானந்தர் ஸ்ரீவிவேகானந்த சுவாமிகளின் அருமை பெருமைகளை எடுத்து விளக்கினர்.

16—1—77 ஞாயிறன்று ஜயந்திப் பொது விழா நிகழ்ந்தது. ஸ்ரீராமானுஜ வைபவம் என்னும் தலைப்பில் பிரம்மஸ்ரீ முக்கூர் லக்ஷ்மீ நரசிம்மாச்சாரியார் இரண்டு மணி நேரம் உபந்நியாசம் செய்தார். மாலை 5.30மணிக்கு துவங்கிய பொதுக்கூட்டத்தில் சுவாமி சித்திநாதானந்தர் ஆங்கிலத்திலும், முன்னுள் உயர்நீதி மன்ற நீதிபதி திரு என். கிருஷ்ணசுவாமி ரெட்டியார் தமிழிலும் சொற்பொழிவுகளாற்றி, சுவாமி விவேகானந்தரின் வாழ்வும் வாக்கும் நமக்குப் புகட்டும் படிப்பினைகளைத் தொகுத்துக் கூறினுர்கள். சுவாமி தபஸ்யானந்தர் தமது முடிவுரையில், ''மனித வாழ்க்கைக்கு ஆக்கப்பூர்வமான முன்னேற்றங்களாகிய கருத்துக்களை எல்லாம் விரிந்த மகாபாரதம் போன்று, விவேகானந்தரின் வாழ்க்கையில் அமைந்திருக்கின்றன. மகாபாரதத்தின் மையக் கருத்து 'அறமே வெல்லும்' என்பதாகும். இன்றைய மனித வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பல அரிய கருத்துக்களைக் கொண்ட விவேகானந்தரின் அருள் மிகுந்த வாழ்க்கையின் மையக் கருத்து, 'ஆத்ம சாட்சாத்காரம்' என்பதாகும். அவர், தாம் மட்டும் முக்தி பெற வேண்டும் என்றும் கூட நினைக்காமல், அனைவரும் கடவுளை அடைய வேண்டும் என்னும் 'ஸர்வ முக்தி' கொள்கையைக் கொண்டிருந்தார். சுவாமி விவேகானந்தரின் எல்லா நூல்களையும் ஆழ்ந்து படிப்பதால் மட்டுமே அவரைச் சிறிதளவாவது உண்மையாகப் புரிந்துகொள்ளமுடியும். அவ்விதம் இல்லாமல், விவேகானந்தரின் ஏதாவது ஒரு கருத்தை எடுத்துக்கொண்டு 'இதுதான் விவேகானந்தரின் கருத்து', 'இவ்வளவேதான் விவேகானந்தர்' என்று சொல்வது அவரை முழுமையாகப் புரிந்து கொண்டதாகாது. சுவாமிஜி தலைசிறந்த தேசபக்தராக இருந்தார். ஆனால், அவருடைய தேசிய உணர்வுகள் பொதுவாக அரசியல்வாதிகளிடம் காணப்படுவதைப்போல இல்லாமல், முழுமையான அளவில் ஆன்மிகத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்கியது'' என்று விளக்கமாகக் கூறினர்.

ஸ்ரீவிவேகானந்த ஜயந்தியின் ஓர் அங்கமாக 17—1—77 திங்கட்கிழமை முதல் 21—1—77 வெள்ளிக்கிழமை வரையிலும், சுவாமி சித்திநாதானந்தர் மாலை ஆரத்திக்குப் பிறகு ஸ்ரீமத் பாகவதம் குறித்துத் தொடர் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

23—1—77 ஞாயிறு மாலை 5முதல் 7 மணி வரை 'நான் பார்க்கும் விவேகானந்தர்' என்னும் தலைப்பில் கருத்தரங்கம் நடைபெற்றது. அர்ஜென்டைனுவைச் சேர்ந்த சுவாமிபராத்பரானந்தரின் தலைமையில் நடைபெற்ற இக் கருத்தரங்கில், திரு சதுர்வேதி பத்ரிநாத், திரு ந. ஜெயகாந்தன், பேராசிரியர் சி.வி. சுப்பிரமணியம், திரு. குழந்தைவேலு ஆகியோர் கலந்துகொண்டு உரையாற்றினர்கள்.





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

**(16—2—77 முதல் 15—3—77 வரை)**

**பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஜயந்தி**

| | |
|---|---|
| 20—2—77 ஞாயிறு: | **ஜன்ம திதி:** விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன. (காலை 5 முதல் 12 வரை) |
| 27—2—77 ஞாயிறு: | **பகவான் ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தியின் பொது விழா:** |
| மாலை 3.30 முதல் 5.30 வரை | ஸ்ரீ வி.எஸ். வெங்கடரமண ராவ் அவர்களால் ஹரிகதா காலக்ஷேபம்: **'கோவிந்த பட்டாபிஷேகம்'** |
| மாலை 5.30 முதல் 7.30 வரை | **பொதுக்கூட்டம்**<br>தலைவர்: சுவாமி தபஸ்யானந்தர்<br>சொற்பொழிவாளர்: சுவாமி விக்ஞானந்தர் (ஆங்கிலம்)<br>திரு ராதாகிருஷ்ணன் (தமிழ்) |
| **ஸ்ரீராமநாம ஸங்கீர்த்தனம்:** | ஏகாதசி தினங்களில் ஆரதிக்குப்பிறகு (1 & 15—3—77) |
| **ஸத் ஸங்கம்:** ஞாயிறு | |
| மாலை 4 முதல் 4.20 வரை | **ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணம்** |
| மாலை 4.30 முதல் 5.30 வரை | சொற்பொழிவு (தமிழ்)<br>**ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்**—Dr. T. M. P. மகாதேவன் (13—3—77) |
| மாலை 5.35 முதல் 6.30 வரை | சொற்பொழிவு (ஆங்கிலம்)<br>**ஸ்ரீமத் பகவத் கீதை** —சுவாமி தபஸ்யானந்தர் |
| **சிறப்புச் சொற்பொழிவுகள்:** சனிக்கிழமை மாலை 5.45 | 1. **இராமாயணத்தில் ஆராய்ச்சி:** திரு. பி. ராமகிருஷ்ணன் (5—3—77)<br>2. **ஸ்ரீமத் ராமாயணம்**—Dr. N. வீழிநாதன் (12—3—77) |
| **ஸ்ரீ சைதன்ய ஜயந்தி:** ஞாயிறு: | **பொதுக்கூட்டம்** (6—3—77)<br>பேசுவோர்: சுவாமி கபீரானந்தர்<br>திரு 'அண்ணா' சுப்பிரமண்யம் |

**வாரநாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்:** (மாலை 5.30)

| | |
|---|---|
| திங்கள்: | **ஸ்ரீ ராமகிருஷ்ண கதாம்ருதம்** (ஆங்கிலம்) சுவாமி அம்ருதானந்தர் |
| செவ்வாய்: | **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்** (ஆங்கிலம்) சுவாமி கபீரானந்தர் |
| புதன்: | **ஸ்ரீமத் பாகவதம்** (ஆங்கிலம்) சுவாமி கோலோகானந்தர் |
| வியாழன்: | **பக்தி யோகம்** (தமிழ்) பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா |
| வெள்ளி | **மகாபாரதம்** (தமிழ்) திரு. அண்ணா' சுப்ரமண்யம் |
| ,, | **ஸ்ரீமத் பகவத் கீதை** (ஆங்கிலம்) மாலை 6.30 சுவாமி கோலோகானந்தர் (ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம், 18, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி) |

| | |
|---|---|
| **விசேஷ தினங்கள்:** | மகா சிவராத்திரி— புதன் (16—2—77)<br>ஸ்ரீசைதன்ய மகாப்ரபு ஜயந்தி— சனி (5—3—77)<br>ஸ்ரீமத் சுவாமி யோகானந்தர் ஜயந்தி—புதன் (9—3—77). |

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்

தலைவர்,

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600 004

தொலைபேசி எண்: 71231

விலைப் பட்டியல்

## எங்கள் தமிழ் நூல்கள் வெளியீடு

| ஸ்ரீ ராமகிருஷ்ணர் : | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீ ராமகிருஷ்ணரும் அவருடைய சீடர்களும் | 11 | 00 |
| ,, ,, காலிகோ | 12 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண கதாமிருதம் (முதல் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டாம் பாகம்) | 8 | 00 |
| ,, (இரண்டு பாகமும்) | 15 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரது திவ்விய சரிதப் பாடல் | 4 | 00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள் | 5 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபநிஷதம் | 1 | 50 |
| உபகதைகள் | 1 | 50 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண சரிதம் | 2 | 00 |
| **சுவாமி விவேகானந்தர்:** | | |
| இந்தியப் பிரசங்கங்கள் | 4 | 50 |
| ,, ,, காலிகோ | 6 | 00 |
| ஸ்ரீ விவேகானந்தர் சரிதம் | 3 | 00 |
| சிறுவர்களது விவேகானந்தர் | 1 | 25 |
| சுவாமி விவேகானந்தர் (ரா. கணபதி) | 11 | 00 |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் | 6 | 00 |
| சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள் காலிகோ | 7 | 00 |
| அருளுரை | 1 | 75 |
| கல்வி | 2 | 50 |
| நமது தாய்நாடு | 1 | 00 |
| பாரதப் பெண்மணிகள் | 2 | 50 |
| கருமயோகம் | 2 | 00 |
| பக்தியோகம் (அச்சில்) | | |
| தற்கால இந்தியா | 1 | 00 |
| நம்மவர் நாட்டு ஞான வாழ்க்கை | 0 | 25 |
| எனது வாழ்வும் பணியும் | 0 | 50 |
| எனது குருநாதர் | 1 | 25 |

| | ரூ. | பை |
|---|---|---|
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 60 |
| எனது போர்முறை | 0 | 75 |
| சிகாகோ பிரசங்கம் | 1 | 00 |
| **ஸ்ரீ சாரதாதேவியார் :** | | |
| ஸ்ரீ சாரதாதேவியார்—அவரது வரலாறும் திருவாக்கும் | 3 | 25 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | 1 | 50 |
| தூய அன்னையார் ஸ்ரீ சாரதாமணி தேவியார் | 1 | 25 |
| **இதர நூல்கள் :** | | |
| பக்தி ஸாரம் | 2 | 25 |
| பக்தி மார்க்கம் | 1 | 00 |
| குருதேவர் வாக்கியம் (அச்சில்) | | |
| திரு அருள் மொழி | 6 | 00 |
| ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகளின் வரலாறும் ஞானோபதேசமும் | 3 | 00 |
| நாரதர் கலகம் | 2 | 00 |
| சுவாமி ராமகிருஷ்ணானந்தர் | 3 | 50 |
| வேதாந்த ஸாரம் | 1 | 25 |
| காலிகோ | 2 | 00 |
| பஜனாவளி | 5 | 00 |
| மகான் துர்க்காசரண நாகர் | 1 | 50 |
| நடராஜ வடிவம் | 0 | 35 |
| ஸ்ரீ ராமநாம ஸங்கீர்த்தனம் | 0 | 20 |
| ஆராத்ரிகம் | 0 | 20 |
| **முரசு நூல்கள் : (பாக்கட் சைஸ்)** | | |
| ஸ்ரீ ராமகிருஷ்ணரின் ஞான முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சாரதாதேவியாரின் அன்பு முரசு | 0 | 80 |
| ஸ்ரீ விவேகானந்தரின் வீர முரசு | 0 | 80 |
| ஸ்ரீ கிருஷ்ணரின் யோக முரசு | 0 | 80 |
| புத்தரின் அற முரசு | 0 | 80 |
| இயேசு கிறிஸ்துவின் அருள் முரசு | 0 | 80 |
| ஸ்ரீ சங்கரரின்-வேதாந்த முரசு | 0 | 80 |

### சுவாமி விவேகானந்தரின் ஞானதீபம்: சுடர்கள் 1—10

சுவாமி விவேகானந்தர் பேசியவை, எழுதியவை—அனைத்தும் அடங்கிய 10 பகுதிகள்.
ஒவ்வொரு பகுதியும் 500 பக்கங்களுக்குக் குறையாதது.

**சாதா பைண்டு விலை ரூ. 5–00** **காலிகோ பைண்டு ரூ. 6–50**




## ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்

மயிலாப்பூர் :: சென்னை 600004

# ஆசிரியர் 'அண்ணா' உரை எழுதிய எங்கள் நூல்கள்

**நாகரத்திலும் தமிழிலும் மூலமும் பதவுரை பொழிப்புரைகளும்**

**விளக்க உரையும் குறிப்புகளும் உள்ளன**

---

### I. உபநிஷதங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஈச-கேன-கட உபநிஷதங்கள் (அச்சில்) | | |
| ப்ரச்ன-முண்டக-மாண்டுக்ய-ஐதரேய உபநிஷதங்கள் (பக்கம் 172) | 1 | 75 |
| காலிகோ | 2 | 50 |
| தைத்திரீய உபநிஷத்து (பக்கம் 91) | 1 | 50 |
| காலிகோ | 2 | 50 |
| சாந்தோக்ய-ப்ருஹதாரண்யக உபநிஷத்துகளின் ஸாரம், ப்ரஹ்மஸூத்ரத்துடன் (மூன்றாவது பதிப்பு) பக்கம் 320 காலிகோ | 4 | 50 |
| மஹாநாராயண உபநிஷத்து (தைத்திரீய நாராயணவல்லி) பக்கம் 146 | 3 | 00 |

### II. பகவத்கீதை

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பகவத்கீதை | 8 | 00 |
| ('அண்ணா' உரையுடன் 6-வது புதிய பதிப்பு) காலிகோ | 9 | 50 |
| ஸ்ரீமத் பகவத்கீதை (பாராயணம்) | 4 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை மூலம் (தமிழ்) பாக்கட் சைஸ் | 2 | 00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை வெண்பா (முத்து ஐயர் இயற்றியது) பக்கம் 223 | 2 | 00 |

### III. வேதாந்த ப்ரகரணம்

| | ரூ. | பை |
|---|---|---|
| விவேகசூடாமணி (பக்கம் 392+XII) | 4 | 25 |
| காலிகோ | 5 | 50 |

### IV. வேதநூல்களும் பிரயோகங்களும்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீருத்ரம்-சமகம் (மஹாந்யாஸத்துடன்-பக்கம் 296) | 4 | 00 |
| காலிகோ | 5 | 00 |
| தைத்திரீய மந்த்ரகோசம் :— | | |
| தமிழில் ஸ்வரத்துடன் | 6 | 00 |
| நாகரத்தில் ஸ்வரத்துடன் முதல்பாகம் | 2 | 50 |
| ஷை இரண்டாம் பாகம் | 3 | 00 |
| ஸ்ரீதேவிமாஹாத்மியம் | 8 | 00 |
| ஸ்ரீதேவிமாஹாத்மியம் பாராயணம் (தமிழில் மூலம்) | 2 | 00 |
| உபநயனம் (அச்சில்) | | |
| தேவிஸ்தோத்திரங்கள் | 2 | 50 |
| குருகீதை | 1 | 00 |
| ஜபவிதானம் (பக்கம் 90) | 1 | 00 |
| ஸந்தியாவந்தனம் (பக்கம் 144) | 2 | 00 |
| (தமிழ்) காலிகோ | 4 | 00 |
| ,, ,, (நாகரம்—தமிழ்) | 4 | 00 |
| தேவீஸூக்தங்களும் உபநிஷதங்களும் | 1 | 50 |
| புருஷஸூக்தம் | 2 | 25 |
| பூஜாவிதானம் (தமிழ்) | 5 | 00 |
| ,, காலிகோ | 7 | 00 |
| ,, (நாகரம்) | 4 | 50 |

### V. புராணங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸ்ரீமத் பாகவத ஸாரம்: முதல் பாகம் (ஸ்கந்தம் 1-9) பக்கம் 560 | 10 | 00 |
| ஷை இரண்டாம் பாகம் (ஸ்கந்தம் 10-12) பக்கம் 560 | 12 | 50 |

### VI. ஸ்தோத்ரங்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஸௌந்தர்யலஹரீ பாஷ்யம் | 5 | 00 |
| காலிகோ | 7 | 00 |
| ஸௌந்தர்யலஹரீ (மூலம்) ,, நாகரம்-தமிழ் | 1 | 50 |
| சிவானந்தலஹரி (பாஷ்யம்) | 4 | 00 |
| ,, (மூலம்) | 1 | 00 |
| சிவ ஸ்தோத்திரங்கள் | 1 | 50 |
| ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 5 | 00 |
| காலிகோ | 6 | 50 |
| ,, ,, பாராயணம் | 3 | 00 |
| ,, ,, மூலம் | 1 | 50 |
| ஸ்ரீலலிதா த்ரிசதீ பாஷ்யம் பக்கம் 184 | 2 | 50 |
| ஸ்ரீ லலிதா த்ரிசதீ ஸ்தோத்ரம் | 1 | 00 |
| ஸ்ரீவித்யா | 5 | 00 |
| ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் | 6 | 00 |
| ,, ,, ஸ்தோத்ரம் (பாராயணத்திற்குரியது) பக்கம் 96 | 2 | 00 |
| ஸ்ரீ விஷ்ணு ஸ்தோத்ரங்கள் | 1 | 00 |
| பஜகோவிந்தம் | 1 | 00 |
| ஸ்ரீக்ருஷ்ணகர்ணாம்ருதம் (பக்கம் 271) | 4 | 50 |
| அஷ்டோத்தர சத நாமாவளிகள் பக்கம் 60 | 0 | 75 |
| ஆதித்ய ஹ்ருதயம் | 0 | 75 |

---

# விவேகானந்தரின் ஞானதீபம்

**10 சுடர்கள் ஒரு சுடரில் 500 பக்கங்களுக்குக் குறைவில்லை**

சுவாமி விவேகானந்தர் பேசியவையும் எழுதியவையும்
எல்லாம் இவற்றுள் அடக்கம்

இந்து மதமும், பலவகைச் சமயங்களும் சமய குரவர்களும்; பல சமயப் பேரவையில் சுவாமிகளின் சொற்பொழிவுகள்; கரும யோகம், பக்தி யோகம், இராஜ யோகம், ஞான யோகம்; வேதாந்தத்தின் ஸமரஸம், ஸாங்கியம், யோகசூத்திரம்; சுவாமிகளின் சம்பாஷணைகள், கடிதங்கள்; (வினாக்களுக்கு) விடைகள், உபதேச மொழிகள், பாடல்கள், ஐரோப்பியப் பயணம்; இந்தியர்க்கும் உலகத்தார்க்கும் அளித்த செய்திகள்; இந்தியாவும் அதன் பண்பாடும் பிரச்சினைகளும் பிறவும் விளக்கப்படுவன.

ஞானஜோதியை வீசுவது; தேசபக்தியை ஊட்டுவது; அறிவிற்கு ஒளியினையும் நெஞ்சிற்குச் சாந்தியையும் கைகளுக்குச் சக்தியையும் பொழிவது; நாடும் மக்களும் உய்யும் வழி காட்டுவது. இது ஞானக் களஞ்சியம்; வேறு நூல் கற்றல் வேண்டா.

தக்காரது தமிழாக்கம்: பலரும் பாராட்டுவது: விரைவில் விலையாவது:

**செவ்வையான அச்சு! நல்ல கட்டடம்!**

| | | | முழுத் தொகுதி | ஒவ்வொரு பகுதியும் |
|---|---|---|---|---|
| 9 சுடர்கள் | சாதாரண பைண்டு | விலை | ரூ. 45 | ரூ. 5—00 |
| ,, | காலிக்கோ பைண்டு | ,, | ரூ. 58.50 | ரூ. 6—50 |

தபால் செலவு வேறு

இந்த ஞானதீபச் சுடர்கள் இல்லந்தோறும் ஒளி தருமாறு உதவ வேண்டும் என்பதும் ஒவ்வொரு குடும்பமும் நிறுவனமும் இந்தத் தொகுதியை வாங்கிப் பயனுற வேண்டும் என்பதும் எங்கள் பேரவா.

நூல்நிலையங்களும் கற்றோர் குடும்பங்களும் பிரதிகளுக்கு முந்துவனவாகுக.

குறிப்பு:— தற்போது 4-ஆம் சுடர் மட்டும் கைவசம் இல்லை.

மானேஜர்
**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
**மயிலாப்பூர் :: சென்னை 600004**

ஆசிரியர்: சுவாமி சித்பவானந்தர்; கூட்டு ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்பவானந்தர் ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் சென்னை 600004
அச்சிடுபவர்: S. இராமசாமி ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ் 97 லாய்ட்ஸ் ரோடு சென்னை 600086